# புதிய
# ஆரம்பக் கல்வி

## தமிழ்

## இரண்டாம் புத்தகம்

[புதிய பாடத் திட்டப்படி தயாரிக்கப்பெற்றது.]

ஆக்கியோன்:
வித்துவான் வே. இலட்சுமணன்.

ஸ்ரீ ஷண்முகா பப்ளிஷிங் ஹவுஸ்
மன்னார்குடி



விலை 60 பை.

முதற்பதிப்பு: பிப்ரவரி, 1958
பத்தாம் பதிப்பு: மே, 1971




Approved by the Madras Text-Book Committee for class use; vide Fort St. George Gazette, Part I-B Page 6, Dated 28—5—1958.



Paper used: D.Demy 32 lbs.

Printed at Lakshmi Press, Mannargudi

# முகவுரை

அண்மையில் வெளியிடப்பெற்ற புதிய பாடத் திட்டத்தையொட்டி இப் புத்தகங்களை வெளியிட்டிருக்கின்றோம். பாடத் திட்டத்தில் கண்டிருக்கும் ஒவ்வொரு குறிப்பும் இவ் வாசகங்களில் சிறப்புப் பெற்றுள்ளது.

பாடங்கள் அந்தந்த வகுப்பிற்கேற்ப, படிப்படியான முறையில் பயிற்சிகளுடன் கொடுக்கப்பட்டிருக்கின்றன. தகுந்த நேர்த்தியான சித்திரங்களும், கருத்துச் செறிந்த பாடல்களும், சுவை மிக்க இனிய கவிதைகளும் கூச்சமின்றிப் பேசப் பழக்கும் உரையாடல், நாடகம் ஆகிய பகுதிகளும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இவ்வாசகங்கள் மாணவர்களின் படிப்பு வளர்ச்சி முறையை உணர்ந்த அனுபவத்துடன் தொகுக்கப்பட்டிருப்பதால், மாணவர்களுக்கு இவை பெரிதும் பயன்படும் என்று நம்புகிறேன்.

இப் புத்தகங்களில் தாங்கள் இயற்றிய கவிதைகளைச் சேர்க்க இசைவு தந்த கவிஞர்கட்கு எங்கள் உளங்கனிந்த நன்றி உரித்தாகும்.

ஆக்கியோன்.

# பொருளடக்கம்

## நாட்டு வணக்கம்

ஜன கண மன அதி நாயக ஜயஹே

பாரத பாக்ய விதாதா

பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா

த்ராவிட உத்கல வங்கா

விந்திய ஹிமாசல யமுனா கங்கா

உச்சல ஜலதி தரங்கா

தவசுப நாமே ஜாகே

தவசுப ஆசிஷ மாங்கே

காயே தவ ஜய காதா

ஜன கண மங்கள தாயக ஜயஹே

பாரத பாக்ய விதாதா

ஜயஹே! ஜயஹே! ஜயஹே!

ஜய ஜய ஜய ஜயஹே!

# தேசீய கீதம்

இந்தியாவின் சுக துக்கங்களை நிர்ணயிக்கிற நீதான்
மக்கள் எல்லோருடைய மனத்திலும் ஆட்சி
செலுத்துகிருய்;
நின் திருநாமம் பஞ்சாப்பையும் சிந்துவையும்
குஜராத்தையும் மகாராஷ்டிரத்தையும்
திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும்;
உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது.
அது விந்திய ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது;
யமுனை, கங்கை நதிகளின் இன்பநாதத்தில்கலக்கிறது;
இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது;
அவை நின் ஆசியை வேண்டுகின்றன;
நின் புகழைப் பாடுகின்றன;
இந்தியாவின் சுக துக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு

வெற்றி! வெற்றி! வெற்றி!



# 1. அணில் பாட்டு

அணிலே, அணிலே, ஓடி வா.
அழகு அணிலே ஓடி வா.
கொய்யா மரம் ஏறி வா.
குண்டுப் பழம் கொண்டு வா.
பாதிப் பழம் உன்னிடம்.
பாதிப் பழம் என்னிடம்.
கூடிக் கூடி இருவரும்
கொறித்துக் கொறித்துத் தின்னலாம்.

—குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா.



# 2. கிழமைகள், மாதங்கள்.

**ஆசிரியர்:**—இராமா! இன்று என்ன கிழமை?

**இராமன்:**—இன்று திங்கட்கிழமை?

**ஆசிரியர்:**—நேற்று என்ன கிழமை?

**இராமன்:**—நேற்று ஞாயிற்றுக்கிழமை.

**ஆசிரியர்:**—கந்தா! நாளைக்கு என்ன கிழமை?

**கந்தன்:**—நாளைக்குச் செவ்வாய்க்கிழமை.

**ஆசிரியர்:**—அப்துல்! நீ மற்றக் கிழமைகளைச் சொல்.

**அப்துல்:**—புதன், வியாழன், வெள்ளி, சனி.

**ஆசிரியர்:**—சுந்தரி! மொத்தம் கிழமைகள் எத்தனை? அவைகளை வரிசையாகச்சொல்.

**சுந்தரி:**—ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி ஆகக்கிழமைகள் ஏழு.

**ஆசிரியர்:**—பிள்ளைகளே! ஏழு கிழமைகள் அல்லது நாட்கள் கொண்டது ஒரு வாரம் ஆகும். முப்பது நாட்கள் கொண்டது ஒரு மாதம் எனப்படும். அவ்வாறு பன்னி

ரண்டு மாதங்கள் கொண்டது ஓர் ஆண்டு ஆகும். பன்னிரண்டு மாதங்களுக்கும் தனித் தனியாகப் பெயர்கள் உண்டு. அவைகளைத் தெரிந்து கொள்ளுங்கள்.

| | | |
|---|---|---|
| 1. சித்திரை | 5. ஆவணி | 9. மார்கழி |
| 2. வைகாசி | 6. புரட்டாசி | 10. தை |
| 3. ஆனி | 7. ஐப்பசி | 11. மாசி |
| 4. ஆடி | 8. கார்த்திகை | 12. பங்குனி |

| | | |
|---|---|---|
| மொத்தம் | நாளை | வாரம் |
| கிழமை | கொண்டது | மாதம் |
| இன்று | மற்ற | ஆண்டு |
| நேற்று | வரிசையாக | தெரிந்துகொள் |

கேள்விகள்

1. இன்று என்ன கிழமை?
2. வாரத்தின் முதல் கிழமை எது?
3. வாரத்தின் கடைசிக் கிழமை எது?
4. நான்காவது கிழமையின் பெயரைச் சொல்.
5. நீ எந்தக் கிழமையில் பள்ளிக்கூடம் வருவதில்லை?
6. இப்போது நடப்பது என்ன மாதம்?
7. சென்ற மாதத்தின் பெயர் என்ன ?
8. அடுத்த மாதம் எது ?
9. ஓர் ஆண்டுக்கு எத்தனை மாதங்கள் உண்டு? வரிசையாகச் சொல்லு.

## பயிற்சி

1. விட்ட எழுத்தைக் கண்டுபிடி :

| | |
|---|---|
| 1. திங்க—கிழமை | 3. மார்— ழி |
| 2. புரட்—சி | 4. பங்கு— |

2. கோட்டில் சரியான சொல்லை எழுது :

| ஒன்று | பல |
|---|---|
| நாள் | —— |
| —— | மாதங்கள் |
| கிழமை | —— |
| —— | ஆண்கள் |
| —— | பெயர்கள் |

3. மாறுபாடு தெரிந்துகொள் :

நேற்று நான் எழுதினேன்.
இன்று நான் எழுதுகிறேன்.
நாளை நான் எழுதுவேன்.

| | | |
|---|---|---|
| எழுதினேன் | எழுதுகிறேன் | எழுதுவேன் |
| படித்தாய் | படிக்கிறாய் | படிப்பாய் |
| பாடினாள் | பாடுகிறாள் | பாடுவாள் |
| ஓடிற்று | ஓடுகிறது | ஓடும் |

# 3. எது உதவும்?

மௌனமாகப் படித்துக் கோடிட்ட இடங்களில் கீழ்க்கண்ட வார்த்தைகளில் தகுந்தவற்றை எழுது.

| | | | |
|---|---|---|---|
| கத்தி | பாய் | கோடரி | பேனு |
| குடை | குடம் | தண்ணீர் | கழுதை |
| நாய் | கரும்பு | பூனை | பாண்டம் |

1. விறகு பிளக்கக் — உதவும்.
2. தாகத்தை தணிக்கத் — உதவும்.
3. காகிதத்தில் எழுதப் — உதவும்.
4. பழம் நறுக்கக் — உதவும்.
5. மழையில் செல்லக் — உதவும்.
6. விரித்துப் படுக்கப் — உதவும்.
7. தண்ணீர் எடுக்கக் — உதவும்.
8. எலி பிடிக்கப் — உதவும்.
9. பொதி சுமக்கக் — உதவும்.
10. வீட்டை காக்க — உதவும்.
11. சர்க்கரை செய்யக் — உதவும்.
12. சோறு சமைக்கப் — உதவும்.



# 4. பழக்கடை

இது ஒரு பழக்கடை. இங்கே பலவகை யான பழங்கள் இருக்கின்றன. கடைக்காரர் பழங்களை விற்பனை செய்கிறார். நாம் நமக்குத் தேவையான பழங்களை இங்கே வாங்கிக்கொள்ள லாம். நாம் பழங்களுக்கு உரிய விலையைக் கொடுக்க வேண்டும்.

பழத் தோட்டங்கள் பெரும்பாலும் கிராமங் களில்தான் உள்ளன. பழ வியாபாரிகள் கிராமத் தோட்டங்களிலிருந்து பழங்களை வருவித்து நகரங்களில் வியாபாரம் செய்கிறார்கள்.

பழங்கள் எல்லாம் இனிப்பானவை. பழங்கள் தின்பதால் உடல் உரம் பெறும். ஒவ்வொரு நாளும் பழம் தின்னுதல் நல்ல பழக்கம்.

படத்தைப் பார்! இந்தக் கடையில் மாம் பழம், ஆரஞ்சுப் பழம், பலாப் பழம், திராட்சைப் பழம், கொய்யாப் பழம், ஆப்பிள் பழம், அன்னுசிப் பழம், வாழைப் பழம் முதலிய பழங்கள் இருக்கின்றன.

கண்ணன், கண்ணம்மா, அவர்களுடைய தந்தை ஆகிய மூவரும் கடையில் பழம் வாங்குகிறார்கள். கண்ணன் கையில் இருப்பது ஆப்பிள் பழம். கண்ணம்மாள் கையில் வைத்திருப்பது திராட்சைக் கொத்து. தந்தையின் கையில் பழக் கூடை இருக்கிறது. கூடைக்குள் ஆரஞ்சு, மாம் பழம், அன்னுசிப்பழம் ஆகியவை இருக்கின்றன.

கண்ணனின் தந்தை வாரத்தில் மூன்று முறைகள் பழக்கடைக்குச்சென்று, பழம் வாங்குவார். கண்ணம்மாவும், கண்ணனும் நாள் தோறும் பழங்கள் சாப்பிடுவது வழக்கம். அதனால் அவர்கள் உடல் உறுதி பெற்று விளங்குகிறார்கள்.

| | | |
|---|---|---|
| விற்பனை | வியாபாரம் | வருவித்து |
| பலவகை | தேவை | உரம் |
| நாள்தோறும் | உரிய | பெரும்பாலும் |
| தின்னுதல் | ஆப்பிள் | முறைகள் |
| உறுதி | அன்னாசி | விளங்குகிறார்கள் |

### கேள்விகள்

1. பழத்தோட்டங்கள் எங்கே அதிகம் உள்ளன ?
2. பழ வியாபாரிகள் பழங்களை எங்கேயிருந்து வருவிக்கிறார்கள் ?
3. பழங்களைத் தின்பதால் ஏற்படும் நன்மை என்ன ?
4. கண்ணம்மாளும், கண்ணனும் எதனால் உடல் உறுதியுடன் விளங்குகிறார்கள் ?
5. உனக்கு என்ன பழங்கள் தின்னப் பிடிக்கும் ?

### பயிற்சி

1. விட்ட சொல்லைக் கண்டுபிடி :
   (1) கடைக்காரர் பழங்களை —— செய்கிறார்.
   (2) பழங்கள் தின்பதால் உடல் —— பெறும்.
   (3) ஒவ்வொரு நாளும் பழம் தின்னுதல் —— பழக்கம்.

2. எதிர்ச்சொற்களைத் தெரிந்துகொள்.

| | | |
|---|---|---|
| வாங்குதல் | × | விற்றல் |
| இங்கே | × | அங்கே |
| இது | × | அது |
| நல்ல | × | கெட்ட |



# 5. ஊஞ்சல்

தம்பி, ஊஞ்சல் ஆடுவோம்.
தள்ளி விளையாடுவோம்.
ஊக்கமாக நீயும் நானும்
ஊஞ்சல் ஏறி ஆடுவோம்.
அங்கும் இங்கும் ஆடுவோம்.
ஆடி ஆடிப் பாடுவோம்.
மெல்ல மெல்ல உந்திவிட்டு
வேகமாக ஆடுவோம்.
ஆசையாக ஊஞ்சலேறி
வீசி வீசி ஆடுவோம்.



## 6. எங்கள் வீடு

இந்த வீடு எங்கள் சொந்த வீடு, இந்த வீட்டில் நாங்கள் வசிக்கிறோம். வீட்டின் முன் புறத்தில் இரண்டு திண்ணைகள் இருக்கின்றன. பின்புறத்தில் ஒரு காய்கறித் தோட்டம் உண்டு. அங்கே ஒரு கிணறும் இருக்கிறது. தோட்டத்தில் காய் வகைகளைப் பயிர் செய்கிறோம்.

வீட்டின் உள்ளே சமையல் அறை, படுக்கை அறை, படிப்பு அறை முதலிய அறைகள் இருக் கின்றன. நடுவில் ஒரு கூடமும் இருக்கிறது. அறைகளுக்குச் சாளரங்களும், பெரிய நிலைக் கதவுகளும் இருக்கின்றன. ஆகையினால் எல்லா அறைகளிலும் நல்லவெளிச்சம் இருக்கும்; சுத்த மான காற்றும் வீசும்.

வீட்டின் கூடத்தில் ஓர் ஊஞ்சல் இருக்கிறது. நான் அதில் உட்கார்ந்து ஆடுவேன். சுவரில்

படங்கள் தொங்குகின்றன. அவைகள் பார் வைக்கு மிகவும் அழகானவை.

எங்கள் வீட்டை நாங்கள் சுத்தமாக வைத்துக் கொள்வோம். சுத்தம் சுகம் தரும் அல்லவா? நாங்கள் குப்பை கூளங்களைக் கண்ட இடங்களில் போடமாட்டோம்; தரையை மெழுகியும் கழுவியும் சுத்தம் செய்வோம்; சுவர்களில் உண்டாகும் ஒட்டடைகளை அடிக்கடி நீக்குவோம்; ஆண்டில் இரு முறைகள் வீடு முழுவதும் வெள்ளை அடிப் போம்; நீயும் உன் வீட்டைச் சுத்தமாக வைத்துக் கொள்.

| | | |
|---|---|---|
| முன்புறம் | சாளரம் | அடிக்கடி |
| பின்புறம் | நிலைக்கதவு | மெழுகி |
| அறை | நீக்குவோம் | ஒட்டடை |

கேள்விகள்

1. அறைக்குச் சாளரங்கள் எதற்காக இருக்கின்றன?
2. வீட்டை எப்படி வைத்துக்கொள்ளவேண்டும்?

பயிற்சி

1. விட்ட எழுத்துக்களைக் கண்டுபிடி :
   1. இரு—கி—றன
   2. உ—கார்ந்து
   3. அ—கானவை
   4. வை—துக்கொ—
2. விட்ட சொற்களைக் கண்டுபிடி :
   1. இந்த——நாங்கள் வசிக்கிறோம்.
   2. வீட்டின் கூடத்தில் ஓர்——இருக்கிறது.
   3. சுத்தம்——தரும் அல்லவா ?
3. பொருள் மாறுவதைப் புரிந்துகொள் :
   1. வீட்டில் பல அறைகள் இருக்கின்றன. அவன் என் கன்னத்தில் அறைந்தான்.
   2. நான் பந்து ஆடுகிறேன். ஆடு தழை தின்னும்.

# 7. எங்கள் குடும்பம்

என் வீட்டில் என் தாயும் தந்தையும் இருக்கின்றனர். அவர்கள் என்னைப் பெற்றவர்கள்; நான் என் தாயை அம்மா என்று அழைக்கிறேன்; தந்தையை அப்பா என்று கூப்பிடுகிறேன்.

என் அப்பாவின் அப்பாவை நான் தாத்தா என்று கூப்பிடுவேன். அப்பாவின் அம்மாவை நான் பாட்டி என்று அழைப்பேன். தாத்தாவும், பாட்டியும் என்னிடம் மிகவும் அன்பு காட்டுவார்கள்.

எனக்கு இரண்டு சகோதரர்களும், மூன்று சகோதரிகளும் உண்டு. மூத்த சகோதரரை அண்ணு என்றும், இளைய சகோதரனைத் தம்பி என்றும் சொல்லுவது வழக்கம். மூத்த சகோதரியை அக்காள் என்றும், இளைய சகோதரியை தங்கை என்றும் சொல்லுவது வழக்கம்.

என் அண்ணன் மதுரையில் வசிக்கிருர். என் அக்காளும் அங்கு இருக்கிருள். என் தம்பியை என் தாத்தா மதுரைக்கு அழைத்துப் போயிருக்கிருர். நானும் என் தங்கையும் இங்கே பாடசாலையில் படிக்கிறேம்.

மற்றெரு தங்கை குழந்தை. எங்களுக்கு அவளிடம் அதிக அன்பு உண்டு. பாட்டி அவளுக்கு விளையாட்டுப் பொருள்களைக் காட்டி அழாமல் பார்த்துக்கொள்வாள்; ஓய்வு நேரங்களில் எங்களுக்கு நல்ல கதைகளைச் சொல்லுவாள். என் அப்பா அரசாங்கத்தில் வேலை பார்க்கிருர். அவர் தினமும் காலையில் பத்திரிகை வாசிப்பது வழக்கம். வீட்டு வேலைகளையெல்லாம் என் அம்மாவே செய்து வருகிருள்.

தாய், தந்தை, தாத்தா, பாட்டி, அண்ணன், தம்பி, அக்காள், தங்கை அனைவரும் சேர்ந்தது ஒரு குடும்பம். எங்கள் குடும்பத்தில் நாங்கள் எல்லோரும் ஒற்றுமையாய் வாழ்ந்து வருகிறோம்.

| | | |
|---|---|---|
| தாய் | சகோதரர் | அண்ணன் |
| தந்தை | சகோதரி | ஒற்றுமை |
| பெற்றவர் | மூத்த | எல்லோரும் |
| அழைக்கிறேன் | இளைய | வாழ்ந்து |
| தங்கை | அக்காள் | சேர்ந்தது |
| ஓய்வு | அனைவரும் | குழந்தை |
| நேரம் | அரசாங்கம் | பத்திரிகை. |

### கேள்விகள்

1. உள் வீட்டில் யார் யார் இருக்கிறார்கள்?
2. உனக்குப் புத்தகங்களை வாங்கித் தருபவர் யார்?
3. உன் வீட்டில் சமையல் செய்வது யார்?
4. உனக்குத் தலைவாரி விடுவது யார்?

### பயிற்சி

1. மனத்திற்குள் படித்துக் கோடு இட்ட இடங்களில் உறவை எழுது.

தாயைப் பெற்றவள் ——
தந்தையின் சகோதரி ——
தந்தையின் தம்பி ——
அண்ணனின் மனைவி ——
தாயின் தங்கை ——
மாமனின் தங்கை ——

2. விட்ட சொற்களைக் கண்டுபிடி:

என் அண்ணன் மதுரையில் ——.
நானும் என் ——, இங்கே —— படிக்கிறோம்.
மற்றொரு தங்கை ——.



## 8. எங்கள் பாடசாலை

இது எங்கள் பாடசாலை. எங்கள் பாடசாலையில் ஐந்து வகுப்புக்கள் இருக்கின்றன. ஒவ்வொரு வகுப்புக்கும் ஓர் ஆசிரியர் இருக்கிறார். இங்கு ஏறக்குறைய இருநூறு பிள்ளைகள் படிக்கிறார்கள்.

நாங்கள் இரண்டாம் வகுப்பில் படிக்கிறோம். நாங்கள் தமிழ், கணக்கு, கதை, விஞ்ஞானம் முதலிய பாடங்களைக் கற்றுக்கொள்ளுகிறோம்.

ஆசிரியர் எங்களிடம் அன்பாக இருக்கிறார். நாங்கள் ஆசிரியருக்குக் கீழ்ப்படிந்து நடக்கிறோம். நாங்கள் ஒவ்வொரு நாளும் தவறாமல் பள்ளிக்கூடம் போய் வருகிறோம். பாடங்களைக் கருத்துடன் கேட்கிறோம்; கற்ற பாடங்களை வீட்டில் படிக்கிறோம்; நாங்கள் படித்த பாடங்களை மறக்கமாட்டோம்.

நாங்கள் மாலை வேளையில் விளையாடுகிறோம். விளையாடும்போது எங்களிடம் ஒழுங்கு முறையும் ஒற்றுமையும் இருக்கும்.

நாங்கள் தோட்ட வேலையும் செய்வது வழக்கம். நாங்கள் பலவிதக் காய்வகைகளை பயிர் செய்கிறோம். தோட்டத்தில் கத்தரிக்காய், வெண்டைக்காய், கொத்தவரங்காய் முதலான செடிகள் வளர்கின்றன. புடலை, அவரை முதலான கொடிகளும் பந்தலில் படர்கின்றன. பரங்கி, பூசனி ஆகிய கொடிகள் தரையில் படர்ந்து காய்க்கின்றன. ஒரு பக்கத்தில் வாழை மரங்களும் செழித்து வளர்ந்திருக்கின்றன.

தோட்டத்தில் விளையும் காய்களை நாங்கள் விற்பனை செய்வதில்லை. எங்கள் பாடசாலையில் எளிய மாணவர்களுக்குப் பகல் உணவு அளிப்பது உண்டு. அதற்கு இந்தக் காய் வகைகளைப் பயன்படுத்துகிறார்கள்.

| | | |
|---|---|---|
| கற்ற | கற்றுக்கொள் | மாலை வேளை |
| ஏறக்குறைய | கீழ்ப்படிந்து | ஒழுங்குமுறை |
| விஞ்ஞானம் | தவறாமல் | தோட்டவேலை |
| எளிய | உணவு | மறக்கமாட்டோம் |

கேள்விகள்

1. உன் பாடசாலையில் எத்தனை ஆசிரியர்கள் இருக்கிறார்கள் ?
2. நீ பள்ளிக்கூடத்தில் படிக்கும் பாடங்கள் எவை ?
3. நீ எந்த வேளையில் விளையாடுவாய் ?
4. உங்கள் பாடசாலைத் தோட்டத்தில் பயிராகும் காய் வகைகள் யாவை ?
5. உனக்கு என்ன காய் அதிகமாகப் பிடிக்கும் ?

1. விட்ட சொற்களைக் கண்டுபிடி :

(1) நாங்கள் இரண்டாம் —— படிக்கிறோம்.

(2) ஆசிரியர் எங்களிடம் —— இருக்கிறார்.

(3) நாங்கள் பாடங்களைக் —— கேட்கிறோம்.

2. முதலில் வாய்மொழியாக விடை கூறுக. பிறகு புள்ளிகள் இட்ட இடத்தில் விடையை எழுது.

1. உன் பெயர் என்ன ?
என் பெயர் .... ... ....

2. உன் பாடசாலையின் பெயர் என்ன ?
என் பாடசாலையின் பெயர் .... .... ....

3. நீ எந்த வகுப்பில் படிக்கிறாய் ?
நான் ... .... ...

4. உன் ஆசிரியரின் பெயர் என்ன ?
என் ... ... .... ....

5. உன் தலைமை ஆசிரியரின் பெயர் என்ன ?
என் ... ... .... ...

6. நீ வசிக்கும் தெருவின் பெயர் என்ன ?
.... .... .... .... ...

7. உன் ஊர், தபால் நிலையம் முதலியவற்றைக் குறித்து எழுது.
... ... ....



# 9. ஔவையார்

குழந்தைகளே! இந்தப்படத்தில் உள்ளவர் ஔவையார். இவர் வெகு காலத்திற்கு முன்பு நமது தமிழகத்தில் வாழ்ந்து வந்தார்.

ஔவையார் சிறந்த கல்வி அறிவு பெற்றிருந்தார். அதனுல் அரசர்கள்கூட இவரிடத்தில் அன்பாகவும் மரியாதையாகவும் இருந்தார்கள். ஔவையார் யாவரையும் நேசித்தார். எல்லோரும் இவரை விரும்பினர். எளியவரிடம் இவருக்கு இரக்கம் அதிகம். இவரும் ஓர் எளியவராகவே வாழ்ந்துவந்தார். ஔவையாருக்குப் பணத்தில் ஆசை இல்லை. கிடைத்ததைக் கொண்டு இவர் மகிழ்ச்சி அடைவார்.

ஒரு சமயம் ஔவையார் ஒரு கிராமத்திற்குச் சென்றுர். நல்ல வெய்யில் வேளை. ஆகையால் ஔவையாருக்குப் பசி ஏற்பட்டது. உணவு

வாங்க அவரிடம் காசு இல்லை. அவர் பசியோடு தவித்துக்கொண்டு நின்றார்.

அச்சமயம் ஒரு குடியானவர் அங்கே வந்தார். ஔவையார் பசியுடன் இருப்பதை அவர் அறிந்தார். தான் கொண்டு வந்திருந்த சோற்றுக் கலயத்தை ஔவையாரிடம் கொடுத்தார். கலயத்தில் கூழ்தான் இருந்தது.

ஔவையார் அதைக் களிப்புடன் சாப்பிட்டார். "குடியானவர் அன்போடு அளித்த அறுசுவை விருந்து" என்று அதைப் பாராட்டினார். அதனால் ஔவையாருக்குக் 'கூழுக்குப் பாடியவர்' என்ற பெயர் வழங்கலாயிற்று.

ஔவையார் நமக்காகப் பல நீதி நூல்களை இயற்றியிருக்கிறார். அவை ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி முதலியன ஆகும்.

| | | |
|---|---|---|
| உள்ளவர் | இரக்கம் | களிப்பு |
| தமிழகம் | மகிழ்ச்சி | விருந்து |
| மரியாதை | போற்றி | அறிவு |
| நேசித்தார் | வழங்கலாயிற்று | நீதிநூல் |

கேள்விகள்

1. ஔவையார் எங்கே வாழ்ந்து வந்தார்?
2. ஔவையாருக்கு யாரிடம் இரக்கம் அதிகம்?
3. ஔவையார் இயற்றிய நூல்களைக் கூறு.

பயிற்சி

1. விட்ட சொற்களைக் கண்டுபிடி :
   (1) ஔவையார்——நேசித்தார்.
   (2) ஔவையாருக்குப் பணத்தில்——இல்லை.
2. பொருள் மாறுவதைப் புரிந்துகொள் :
   (1) ஆத்திசூடி ஒரு நூல்.
   பஞ்சிலிருந்து நூல் நூற்கலாம்.
   (2) தம்பி, பாடம் படி. ஏணியின் படிகளில் ஏறு.

# 10. தெரிந்து கொள்

| | | | |
|---|---|---|---|
| நாய் | குரைக்கும் | காகம் | கரையும் |
| ஆடு | கத்தும் | கிளி | பேசும் |
| குதிரை | கனைக்கும் | மயில் | அகவும் |
| நரி | ஊளையிடும் | குயில் | பாடும் |
| யானை | பிளிறும் | ஆந்தை | அலறும் |
| சிங்கம் | கர்ச்சிக்கும் | கோழி | கூவும் |

நாய் வள் வள் என்று குரைக்கும்
குயில் குக்கூ என்று பாடும்
சேவல் கொக்கரக்கோ என்று கூவும்
காகம் கா கா என்று கரையும்
மாடு ம்மா ம்மா என்று கத்தும்
ஆடு ம்மே ம்மே என்று கத்தும்

பயிற்சி

1. கோடு இட்ட இடங்களில் பொருத்தமான சொற்களை எழுது.

**மரக்கிளையில், காட்டில், வீட்டில், வளையில், பொந்தில், கூட்டில்.**

1. புலி ———— வசிக்கும்.
2. பாம்பு ———— வாழும்.
3. காகம் ———— கூடு கட்டும்.
4. கிளியைக்———— வளர்க்கிறார்கள்.
5. எலி————வசிக்கும்.
6. பசுவை————வளர்க்கிறோம்.



## 11. நிலாப் பாட்டு

கப்பல் போல இருந்தாலும்
கரைக்கு வந்து சேராது.
அப்பம் போல இருந்தாலும்
அதனைத் தின்ன முடியாது.
ஓடம் போல இருந்தாலும்
ஓடிப் பிடிக்க முடியாது.
ஆடும் பந்தாய் இருந்தாலும்
ஆட்டம் ஆட முடியாது.
கிண்ணம் போல இருந்தாலும்
கிட்டே செல்ல முடியாது.
வண்ணப் பூப்போல் இருந்தாலும்
வாரிச் செருக முடியாது.
தம்பி ! தம்பி ! அது என்ன?
தப்பாமல் நீ சொல்லிடுவாய் !



## 12. உதவிக்கு உதவி

கந்தன் தன் வயலில் வேலை செய்து கொண்டிருந்தான். உச்சி வேளை வரவே அருகிலிருந்த ஓர் ஆலமரத்தடியில் தங்கி இளைப்பாறினான். தன்னுடன் கொண்டு வந்திருந்த சோற்று மூட்டையை எடுத்துப்பிரித்தான். அப்பொழுது அங்கு ஒரு நாய் நொண்டிக்கொண்டு வந்து சேர்ந்தது. கந்தன் சோற்று மூட்டையை பிரிப்பதை நாய் கண்டது. நாக்கைத் தொங்கவிட்டுக்கொண்டே அது ஏக்கத்துடன் நின்றது.

நாய் பசியாக இருப்பதைக் கந்தன் அறிந்தான். அவனுக்கு நாயின்மீது இரக்கம் பிறந்தது. உடனே தன் உணவில் ஒரு பகுதியை அதற்குக் கொடுத்தான். நாய் அதை உண்டது; பசி நீங்கியதும் அமைதியாக அண்டையில் படுத்துக் கொண்டது.

சிறிது நேரம் கழித்துக் கந்தன் வீட்டுக்குப் புறப்பட்டான். நாயும் அவனுடன் புறப்பட்டது. அது நொண்டிக்கொண்டே அவனைப்பின்பற்றிச் சென்றது. அவனைப்பிரிய அதற்கு மனம் வரவில்லை. கந்தனுக்கும் அதன்மீது அன்பு வளர்ந்தது. கந்தன் வீடு சேர்ந்தான். நாயும் வீட்டுக்குக் காவலாக வெளியில் படுத்தது.

மறுநாள் கந்தன் வயலுக்குப் புறப்பட்டான். நாயும் அவனைப் பின் தொடர்ந்தது. வெய்யில் நேரத்தில் கந்தன் வழக்கம்போல் மர நிழலில் படுத்தான். களைப்பினால் தூங்கிவிட்டான். நாய் மட்டும் தூங்காமல் விழித்துக் கொண்டிருந்தது.

அப்பொழுது ஒரு பாம்பு வந்தது. அது கந்தனிடம் நெருங்கி வருவதை நாய் கண்டது. உடனே அது பலமுறை குரைத்துக் கந்தனை எழுப்பிற்று. கந்தன் விழித்து எழுந்தான்; பாம்பு பயந்து ஓடுவதைக் கண்டான்; நாய் குரைத்ததன் காரணத்தை அறிந்தான்; தன்னை ஆபத்திலிருந்து காப்பாற்றிய நாயை அவன் தடவிக் கொடுத்தான்; "நீயே என் உயிர்த் தோழன்" என்று கூறிப் பாராட்டினான்.

முதல் நாள் கந்தன் நாயை பசியிலிருந்து காப்பாற்றினான்; மறு நாள் நாயோ கந்தனைச் சாவிலிருந்தே காப்பாற்றி விட்டது. நாய் நன்றி மறவாத 'வீட்டு மிருகம்.'

| | | |
|---|---|---|
| **உச்சிவேளை** | விழித்து | பின்பற்றி |
| **இளைப்பாறினான்** | ஆபத்து | காவலாக |
| **ஏக்கம்** | காப்பாற்றினான் | தொடர்ந்து |
| **உண்டது** | பகுதி | பிறந்தது |

## கேள்விகள்

1. கந்தன் சோற்று மூட்டையைப் பிரிப்பதைக் கண்ட நாய் என்ன செய்தது ?
2. நாய் பசியாக இருப்பதை அறிந்த கந்தன் என்ன செய்தான் ?
3. கந்தன் தூங்கியபோது என்ன நடந்தது ?
4. பாம்பைக் கண்டதும் நாய் என்ன செய்தது ?
5. கந்தன் 'உயிர்த்தோழன்' என்று நாயைப் பாராட்டக் காரணம் என்ன ?

## பயிற்சி

1. 'நன்றி மறப்பது கூடாது' என்ற கருத்தை மற்றொரு கதையின் மூலம் விளக்குக.

   (ஆசிரியர் சொல்லிக் கொடுக்கலாம்)

2. அரி—அறி. மாறுபாடு தெரிந்துகொள்.

   கந்தன் கத்தியால் பழங்களை அரிந்தான்.
   கந்தன் நாயின் பசியை அறிந்தான்.

3. விட்ட சொற்களைக் கண்டுபிடி.

   நாய் அவனைப்——சென்றது.
   கந்தன் நாயைப்——காப்பாற்றினான்.
   நாய் கந்தனைச்——காப்பாற்றியது.

4. எதிர்ச் சொற்களைத் தெரிந்துகொள்.

   பயந்து × துணிந்து
   சாவு × வாழ்வு
   உள்ளே × வெளியே

# 13. சூரியன்

படத்தில் சூரியனைப் பார்! சூரியன் ஒவ்வொரு நாளும் காலையில் தோன்றும். காலைச் சூரியன் ஒரு சிவப்புப் பந்துபோல் அழகாகக் காணப் படும். அப்பொழுது அதைப் பார்த்தால் கண்கள்



கூசுவதில்லை. பிறகு அது கொஞ்சம்கொஞ்சமாய் மேலே ஏறிச் செல்லும். அப்போது அது வெண்மையாகக் காணப்படும். அதை நம்மால் உற்றுப் பார்க்க முடியாது. உற்றுப் பார்த்தால் கண்கள் மிகவும் கூசும்.

ஆகாயத்தில் சூரியன் மேலே செல்லச் செல்ல, வெய்யிலும் வெப்பமும் அதிகமாகும். நடுப்பகலில் அது வானத்தில் நேர் உச்சியில் காணப்படும். அந்தக் காலத்திற்கு உச்சிவேளை என்று பெயர். உச்சி வேளையில் தான் வெய்யில் மிகவும் கடுமையாக இருக்கும். பிறகு, வெய்யில் குறைந்துகொண்டே வரும்.

சூரியன் மாலையில் மறையும். நீ சூரியன் மறைவதைப் பார்த்திருக்கிறாயா? சூரியன் மறைந்த பின்பு எங்கும் இருட்டாகி விடும்.

சூரியன் தோன்றி மறையும் வரை உள்ள காலத்தைப் பகல் என்று சொல்லுகிறோம். சூரியன் மறைந்து மறுநாள் அது தோன்றும் வரை உள்ள காலத்தை இரவு என்று சொல்லுகிறோம். ஒரு பகலும் ஓர் இரவும் சேர்ந்து ஒரு நாள் ஆகும். சூரியனைக்கொண்டே நாம் காலத்தையும் கணக்கிடுகிறோம்.

சூரியன் தோன்றும் திசையைப் பார்த்து நில். உன்னுடைய முன்பக்கம் கிழக்கு; முதுகுப் பக்கம் மேற்கு; உனது வலது கைப்புறம் தெற்கு; இடது கைப்புறம் வடக்கு. சூரியன் கிழக்கில் தோன்றி மேற்கில் மறைகிறது.

சூரியன் நமக்கு வெப்பத்தையும் வெளிச்சத்தையும் கொடுக்கிறது. மழை உண்டாவதற்கும் மர -செடி, கொடிகள் எல்லாம் வளர்வதற்கும் சூரியனே உதவி செய்கிறது.

| | | |
|---|---|---|
| உற்றுப்பார் | உச்சிவேளை | தோன்றி |
| வெய்யில் | கடுமையாக | மறைகிறது |
| காரணம் | நடுப்பகல் | வெப்பம் |
| **உயிர் வாழ** | **சேர்ந்து** | **இருட்டு** |

## கேள்விகள்

1. சூரியன் காலையில் எதைப்போல் காணப்படும் ?
2. எந்த காலத்திற்கு உச்சி வேளை என்று பெயர் ?
3. பகல் என்று எதைச் சொல்லுகிறோம் ?
4. சூரியன் எப்பொழுது தோன்றுகிறது? எங்கே தோன்றுகிறது? எப்பொழுது மறைகிறது ?
5. சூரியன் நமக்கு என்ன கொடுக்கிறது ?

## பயிற்சி

1. விட்ட சொற்களை எழுது.

   (1) சூரியன்——மறைகிறது.

   (2) சூரியன்——தோன்றி——மறைகிறது.

2. எதிர்ச் சொற்களைத் தெரிந்துகொள்.

| | | |
|---|---|---|
| தோன்றுகிறது | × | மறைகிறது |
| முன்பக்கம் | × | பின்பக்கம் |
| காலை | × | மாலை |
| பகல் | × | இரவு |
| கிழக்கு | × | மேற்கு |
| தெற்கு | × | வடக்கு |

3. செய்முறைப் பயிற்சி :

கிழக்கு முகமாக நில். மேற்கு முகமாகத் திரும்பு. வடக்குத் திசையைக் காட்டு. தெற்குப் பக்கம் எது ?

கிழக்கு மேற்காக நட. தெற்கு வடக்காக நட. பள்ளிக்கூடத்தின் வாயிற்புறம் எந்தத் திசையில் இருக்கிறது ?



## 14. யானை

மிருகங்களில் பெரியது யானை. யானையின் கால்கள் தூண்களைப்போல் பருத்திருக்கும். யானையின் காதுகள் முறங்களைப்போல் விரிந்து இருக்கும். யானையின் கண்கள் சிறியவை. யானையின் வால் குட்டையானது; யானையின் முகத்தில் தொங்குவது துதிக்கை. துதிக்கையே யானையின் கை. யானை துதிக்கையால் உணவை உட்கொள்ளும்; தண்ணீரை அள்ளிக் குடிக்கும்; மரக்கிளைகளை ஒடித்து விசிறிக்கொள்ளும்; பளுவான மரங்களையும் தூக்கும்.

யானை வலிமை மிகுந்த மிருகம். அதற்கு அறிவும் ஞாபகமும் அதிகம் உண்டு. பழகிய யானை மனிதர்களுக்கு உதவி செய்யும். யானையை வளர்ப்பவன் யானைப்பாகன். பாகன் சொற்படி யானை நடக்கும்.

யானைகளை நீங்கள் பார்த்திருப்பீர்கள். யானைகள் மலைக்காடுகளில் வசிக்கும். மனிதர்கள் அவைகளை வேட்டையாடிப் பிடித்துப் பழக்குவார்கள்; பிறகு அவற்றைப் பல வேலைகளுக்குப் பயன்படுத்துவார்கள்.



யானை பெருந்தீனி தின்னும். அரிசி, கரும்பு, சணல், தேங்காய், வாழைப்பழம், நாணற்புல் முதலியவை யானையின் உணவுப் பொருள்கள் ஆகும். "யானை இருந்தாலும் ஆயிரம் பொன்; இறந்தாலும் ஆயிரம் பொன்" என்பது பழமொழி. ஆண் யானைகளுக்குத் தந்தங்கள் உண்டு. யானையின் இரண்டு கடைவாய்களிலும் தந்தம் முளைத்திருக்கும். தந்தம் வெண்மையாகவும், வழவழப்பாகவும் இருக்கும். தந்தங்களால் அழகான

பொருள்களைச் செய்வார்கள். அதனால் அவை விலை உயர்ந்தவை.

| | | |
|---|---|---|
| பருத்து | ஞாபகம் | வேட்டையாடி |
| விரிந்து | உட்கொள் | ஒடித்து |
| துதிக்கை | அள்ளி | பளுவான |
| பயன்படும் | பழமொழி | கடைவாய் |
| மலைக்காடு | பெருந்தீனி | முளைத்திருக்கும் |

### கேள்விகள்

1. யானையின் கால்கள் எப்படி இருக்கும் ?
2. யானை துதிக்கையால் என்ன செய்யும் ?
3. யானையை வளர்ப்பவனின் பெயர் என்ன ?
4. யானையை எங்கே வளர்க்கிறார்கள் ?
5. யானையின் உணவுப் பொருள்கள் எவை ?
6. தந்தங்களால் என்ன செய்வார்கள் ?

### பயிற்சி

1. விட்ட சொற்களை எழுது :

மிருகங்களில் —— யானை.
யானையின் கண்கள் —— .
யானை —— உணவை உட்கொள்ளும்.

2. எதிர்ச் சொற்களைத் தெரிந்துகொள்:

| | | | |
|---|---|---|---|
| பெரியது | × சிறியது | பளுவான | × இலேசான |
| பருத்து | × இளைத்து | மிகுந்த | × குறைந்த |
| விரிந்து | × சுருங்கி | பழகிய | × பழகாத |
| குட்டை | × நெட்டை | ஞாபகம் | × மறதி |

3. யானை இருந்தாலும் ஆயிரம் பொன்;
யானை இறந்தாலும் ஆயிரம் பொன்.

இது ஒரு பழமொழி; பழமொழிகளை அறிவது நல்லது.



## 15. எலியும், தவளையும்

ஒரு குளத்தில் தவளை ஒன்று வாழ்ந்தது. குளக்கரையில் ஒரு பொந்து உண்டு. அந்தப் பொந்தில் ஓர் எலி வசித்துக்கொண்டிருந்தது. தவளைக்கு எலியிடம் அன்பு; எலிக்கும் தவளை யிடம் ஆசை. ஆகையால் இரண்டும் நட்புடன் பழகி வந்தன. இரண்டும் சேர்ந்தே எப்பொழு தும் விளையாடுவது வழக்கம்.

ஒரு நாள் எலி தவளையிடம் "நாம் இருவரும் நண்பர்கள். நம்முடைய நட்பு இன்னும் அதிக மாக வளர வேண்டும். அதற்கு ஒரு வழி செய்ய லாம்; நம்முடைய கால்களைக் கயிற்றுல் சேர்த்துக் கட்டிக்கொள்வோம். அப்படிச் செய்தால் எப் பொழுதும் நாம் பிரியாமல் இருக்கலாம்'' என்று சொல்லியது. தவளையும் அதற்கு இணங்கியது.

இரண்டும் அவைகளுடைய கால்களைக் கயிற்றால் கட்டிக்கொண்டன.

பின்பு குளக்கரையில் அவை இரண்டும் சேர்ந்து விளையாடிக் கொண்டிருந்தன. அப்பொழுது ஒரு பெரிய பருந்து வானில் பறந்து வந்தது. பருந்தைப் பார்த்தவுடன் எலியும் தவளையும் அச்சம் கொண்டன. உடனே தவளை தண்ணீரில் குதித்து ஆழத்தில் சென்றது. எலிக்குப் பொந்தில் நுழைய முடியவில்லை. தவளையின் காலுடன் கட்டியிருந்த கயிறு எலியைச் சேர்த்து இழுத்தது.

அதனால் எலி தண்ணீரில் மூழ்கித் திணறி இறந்தது. இறந்த பின் எலி தண்ணீரில் மிதந்தது. வட்டமிட்டுக்கொண்டிருந்த பருந்து எலியைக் கொத்திக்கொண்டு கிளம்பிற்று. எலியுடன் தவளையும் சேர்ந்து மேலே சென்றது. பருந்து, எலியையும் தவளையையும் சேர்த்துத் தூக்கிச் சென்றது.

கூடா நட்பினால் எலியும் தவளையும் இறந்தன.

| | | | |
|---|---|---|---|
| பொந்து | கொத்தி | கூடா நட்பு | தூக்கி |
| அச்சம் | கிளம்பிற்று | இணங்கியது | மிதந்தது |
| நுழைய | வட்டமிட்டு | இழுத்தது | வாழ்ந்து |

கேள்விகள்

1. எலி எங்கே வசித்துக் கொண்டிருந்தது?
2. எலி தவளையிடம் என்ன சொல்லியது?
3. எலியும் தவளையும் எதற்காகக் கயிற்றால் கட்டிக் கொண்டன?
4. எலி ஏன் இறந்தது?
5. இப்பாடத்தினால் நீ அறியும் நீதி என்ன?

## 16. தென்னை மரம்

மரங்கள் எல்லாவற்றிலும் சிறந்தது தென்னை மரம். தென்னை மரம் மணற்பாங்கான இடத்தில் நன்றாக வளரும். இது நாற்பது அல்லது ஐம்பது அடி உயரம் வரையில் வளரும்.



முதலில் முற்றிய காயை மணல் நிறைந்த இடத்தில் புதைப்பார்கள். நாள்தோறும் தண்ணீர் ஊற்றி வந்தால் சில நாட்களில் அது சிறு கன்று ஆகும். அதைப் பெயர்த்து எடுத்து வேறு

இடத்தில் நடுவார்கள். ஐந்து அல்லது ஆறு ஆண்டுகளில் தென்னங்கன்று மரமாக வளர்ந்து காய்க்க ஆரம்பிக்கும்

நம் நாட்டில் தென்னை மரங்கள் ஏராளமாகப் பயிராகின்றன. தென்னை தேங்காய் தருகிறது. தேங்காயைக் கறி வகைகளுக்குப் பயன்படுத்து கிறோம். தின்பண்டம் செய்வதற்கும் தேங்காய் உபயோகமாகிறது. இள நீர் சுண்டிய தேங் காய்க்கு 'கொப்பரை' என்று பெயர். கொப்பரை யைச் செக்கில் இட்டு ஆட்டுவார்கள். அப்படிச் செய்வதால் எண்ணெய் கிடைக்கிறது. தேங்காய் எண்ணெய் பலகாரங்கள் செய்ய உதவும். சவுக் காரம் செய்வதற்கும் தேங்காய் எண்ணெய் உப யோகிப்பது உண்டு. தேங்காய் எண்ணெயைத் தலைக்குத் தடவிக்கொள்வது வழக்கம்.

தேங்காய்ப் பிண்ணாக்கு நிலத்துக்கு எரு வாகும். மாடுகளுக்குத் தேங்காய்ப் பிண்ணாக்கு நல்ல தீனி ஆகும். கொட்டாங்கச்சியிலிருந்து அகப்பை, பொத்தான் முதலியவைகளைச் செய்ய லாம். தென்னை மட்டையை இரண்டாகப் பிளந்து கீற்று முடைவார்கள். வீடுகளுக்குக்கூரை போடக் கீற்றுகள் உதவுகின்றன. தென்னை ஈர்க்குகளைத் துடைப்பமாகச் செய்யலாம். தேங்காய் நாரால் கயிறு, பை, மிதியடி முதலியவற்றைச் செய்வார் கள்.

தென்னை மரத்தின் ஒவ்வோர் உறுப்பும் மனி தர்களுக்குப் பயன்படுகிறது. ஆகையால் தென்னை மரத்தைப் பயிராக்குவது முக்கியமான செயல் ஆகும்.

| | | |
|---|---|---|
| கறிவகை | சவுக்காரம் | கீற்று |
| இளநீர் | பிண்ணுக்கு | ஈர்க்கு |
| சுண்டிய | எரு | மட்டை |
| தென்னங்கன்று | அகப்பை | மிதியடி |
| கொப்பரை | பொத்தான் | முற்றிய |
| பலகாரம் | பிளந்து | மணற்பாங்கு |

கேள்விகள்

1. தென்னை மரம் எந்த இடத்தில் நன்ருக வளரும் ?
2. தென்னையைப் பயிராக்குவது எப்படி ?
3. தேங்காய் எண்ணெய் எதற்குப் பயன்படுகிறது ?
4. கொட்டாங்கச்சியிலிருந்து என்ன செய்யலாம் ?
5. தேங்காய் நாரால் என்ன செய்வார்கள் ?

பயிற்சி

1. விட்ட சொற்களை எழுது.
   1. கொப்பரையைச் செக்கில் இட்டு ——.
   2. வீடுகளுக்குக் கூரைபோடக்——உதவுகின்றன.
   3. தென்னை ஈர்க்குகளைத்——செய்யலாம்.

2. மாறுபாடு தெரிந்துகொள்.

   (1) கண்ணனின் உயரம் நான்கு அடி.
   முத்து, மாணிக்கத்தை அடித்தான்.

   (2) பசுவின் கன்று துள்ளி ஓடும்.
   தென்னங் கன்று ஓங்கி வளரும்.



## 17. கோழிப் பாட்டு

கோழி கோழி வா வா வா;
கொக்கரக்கோ என்று கூவி வா.
கூரையை விட்டே இறங்கி வா;
கூட்டில் அடையைக் காத்திட வா.

குத்துச்சண்டை நீ போடுவது ஏன்?
குப்பையைக் கிண்டி மேய்வதும் ஏன்?
கத்தி போல் உன் கால் விரலால்
கொத்தித் தின்ன வா நெல்லினையே.

வட்ட மிட்டுப் பருந்தங்கே
வானில் பறந்து வருவது பார்.
பெட்டைக் கோழி வாராயோ?
பிள்ளைகள் உயிரைக் காவாயோ?



## 18. உண்மை பேசிய கண்ணன்

ஓர் ஊரில் கண்ணன் என்ற ஓர் இளைஞன் இருந்தான். அவன் இரண்டாவது வகுப்பில் படித்து வந்தான். அவன் நன்றாகப் படித்தான். அதனால் அவனுடைய தந்தை அவனிடம் மிக்க அன்பு செலுத்தினார்; ஒரு நாள் அவனுக்கு ஒரு பந்தை வாங்கிக் கொடுத்தார். அவன் அதைக் கையில் வைத்துக்கொண்டு படிக்கும், அறையில் விளையாடிக் கொண்டிருந்தான்.

அந்த அறையில் ஒரு பெரிய நிலைக்கண்ணாடி இருந்தது. பந்து கை தவறிப்போய் அக்கண்ணாடி யின்மேல் பட்டது. உடனே கண்ணாடி கீழே விழுந்து உடைந்துவிட்டது. கண்ணன் மிகவும் வருத்தம் அடைந்தான்; தான் செய்தது தவறு என்பதை உணர்ந்தான்; உடனே தகப்பனாரிடம் ஓடினான்; நடந்ததைச் சொன்னான்; தன்னை மன் னிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டான்,

கண்ணன் உண்மையைச் சொன்னதற்காக அவன் தகப்பனுர் மகிழ்ச்சி அடைந்தார். "கண்ணு! கண்ணுடி போனல் போகிறது. நீ உண்மையைச் சொன்னுயே; அதுவே போதும். உன்னை மன்னித்துவிட்டேன். நீ எப்பொழுதும் இதே போல் உண்மை பேசினுல் நன்மை அடைவாய்" என்று வாழ்த்தினுர்.

கண்ணன் பெரியவன் ஆனுன்; உயர்ந்த பல பதவிகளைப் பெற்றுன். எப்பொழுதும் உண்மையையே பேசி வந்ததால் அவனை எல்லோரும் பாராட்டினுர்கள். நீயும் கண்ணனைப்போல் எப்பொழுதும் உண்மை பேசு. உண்மைதான் உயர்வு தரும்.

| | | |
|---|---|---|
| நிலைக்கண்ணுடி | இளைஞன் | அடைவாய் |
| பதவி | உடைந்து | உயர்வு |
| வருத்தம் | உணர்ந்தன் | பாராட்டினுர்கள் |
| கைதவறி | வாழ்த்தினுர் | பெரியவன் |

கேள்விகள்

1. கண்ணன் எந்த வகுப்பில் படித்து வந்தான் ?
2. அவன் எங்கே விளையாடிக் கொண்டிருந்தான் ?
3. அந்த அறையில் என்ன இருந்தது ?
4. கண்ணுடி ஏன் உடைந்தது ?
5. கண்ணனின் தகப்பனுர் என்ன சொன்னுர் ?

பயிற்சி

1. மாறுபாடு தெரிந்து கொள் :

| | | |
|---|---|---|
| இருந்தான் | இருக்கிறுன் | இருப்பான் |
| கொடுத்தார் | கொடுக்கிறுர் | கொடுப்பார் |
| வாழ்த்தினுர் | வாழ்த்துகிறுர் | வாழ்த்துவார் |

2. சரியாகச் சொற்களைச் சேர்த்துவை :

| | |
|---|---|
| இரண்டாவது | கொடுத்தார் |
| வாங்கிக் | அறை |
| படிக்கும் | வகுப்பில் |

## 19. தொழிலாளர்கள்

இவர் ஒரு தச்சர்; இவர் நமக்கு வேண்டிய நாற்காலி, கட்டில், பெட்டி முதலிய மரச்சாமான்



களைச் செய்து கொடுப்பார். ஏர் கலப்பை முதலியவைகளையும் இவரே செய்கிறார். உளி, ரம்பம், இழைப்புளி, கொட்டாப்புளி முதலியவை இவர் உபயோகிக்கும் கருவிகள் ஆகும்.

அரிவாள், மண்வெட்டி ஆணி முதலிய இரும்புக் கருவிகளைச்செய்பவர் கருமார் அல்லது கொல்லர். கருமார் இரும்பை உலையில் இட்டுக்காய்ச்சிப் பல பொருள்களைச்செய்வார். நகைகள் செய்பவரைத்





தட்டார் அல்லது பொற்கொல்லர் என்று அழைக்கிறோம். இவர் நமக்கு வேண்டிய காப்பு, கொலுசு, சங்கிலிமுதலிய நகைகளைச் செய்து கொடுக்கிறார். இவர் பொன், வெள்ளி ஆகியவைகளை உருக்கி அழகான நகைகள் செய்வார்.



மண் பாண்டங்களைச் செய்பவர் குயவர். இவர் களிமண்ணைப் பிசைந்து, அதைச்சக்கரத்தில் வைத்துச் சுற்றிப்பாண்டங்கள் செய்வார். பிறகு அவற்றைச் சூளையில் வைத்துச் சுட்டு நமக்குத் தருவார்.



இவர் ஒரு கன்னர். இவர் பாத்திரங்கள் செய்வதில் திறமைஉள்ளவர். இவரே செம்பு, பித்தளை, வெண்கலம் முதலிய பாத்திரங்களை நமக்குச் செய்து கொடுப்பார்.

இன்னும் பலவகைத் தொழிலாளர்கள் நமக்குத் தேவையான பொருள்களைச்செய்து தருகிறார்கள்; தொழிலாளர்களிடம் நாம் அன்பாக இருக்க வேண்டும்.

| | | |
|---|---|---|
| உளி | இழைப்புளி | கருமார் |
| கலப்பை | கொட்டாப்புளி | உலை |
| தொழிலாளர் | அரிவாள் | பொற்கொல்லர் |

பயிற்சி

1. உனக்குத் தெரிந்த வேறு தொழிலாளர்களைக் கூறு.
2. கோடிட்ட இடங்களில் சரியான சொற்களை எழுது.
   (1) செப்புத் தவலை செய்ய——செல்லவேண்டும்.
   (2) மண் பாண்டம் செய்ய——செல்லவேண்டும்.
   (3) அரிவாள் செய்ய——செல்ல வேண்டும்.



## 20. சைக்கிள் வண்டி

தங்கையே பார்! தங்கையே பார்!
சைக்கிள் வண்டி இதுவே பார்!

சிங்கார மான வண்டி!
சீமையிலே செய்த வண்டி;

இரும்பாலே செய்த வண்டி;
எங்கெங்கும் ஓடும் வண்டி;

மாடில்லை; குதிரையில்லை;
மாயமாய்ப் பறந்திடும் பார்;

காலாலே மிதிப்பதனால்
கடும் விசையில் போயிடும் பார்!

அக்காளும் தங்கையும் போல்
அவை போகும் அழகைப் பார்!

— கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை.



## 21. காந்தித் தாத்தா

குழந்தைகளே! நீங்கள் எல்லோரும் காந்தித் தாத்தாவைப் பற்றிக் கேள்விப் பட்டிருப்பீர்கள். காந்தித்தாத்தா நமது நாட்டின் தந்தை ஆவார். அவரை எல்லோரும் மகாத்மா என்று கொண்டாடுகிருர்கள். அவருடைய வரலாற்றை நீங்கள் அறியவேண்டும்.

காந்தித் தாத்தா போர்பந்தர் என்ற ஊரில் பிறந்தார், அந்த ஊர் பம்பாய் மாநிலத்தில் உள்ளது. அவரது முழுப்பெயர் மோகனதாச கரம் சந்திர காந்தி என்பதாகும்.

காந்தித் தாத்தா சிறுவயதிலேயே நல்லொழுக்கம் உடையவராக இருந்தார்; நன்ருகக் கல்வி கற்ருர். அயல் நாட்டுக்குச் சென்று படித்தார்; சிறந்த அறிவு பெற்ருர்.

காந்தித்தாத்தா பெற்ருேர் சொற்படி நடந்தார்; எப்பொழுதும் உண்மையையே பேசினுர்; எளியவர்களைக் கண்டு கருணை காட்டினுர்; காந்தித் தாத்தாவும் ஓர் எளியவராகவே வாழ்ந்தார். எளியவர்களைப் போலவே அவர் சட்டை அணிவதை நிறுத்தினுர்; முழங்கால் வரை துண்டு கட்டிக்கொண்டார்.

காந்தித் தாத்தா தினமும் நூல் நூற்ருர். எல்லோருமே நூல் நூற்கவேண்டும் என்று கூறினுர்; கதர் ஆடையை உடுக்குமாறு நாட்டு மக்களை வேண்டினுர். சத்தியம்; கருணை முதலிய நல்ல குணங்களைப் பின்பற்றினுர். பொது மக்களுக்கும் நல்ல புத்திமதிகளைப் புகட்டினுர்.

நம் நாட்டை அயல் நாட்டார் ஆண்டு வந்தார்கள். காந்தித்தாத்தா நமது நாட்டை நாமே ஆளவேண்டும் என்று விரும்பினுர். அதற்காக நேர்மையான வழிகளில் விடுதலை இயக்கத்தை நடத்திப் போராடினுர். இறுதியில் இந்திய நாடு விடுதலை பெற்றது.

இருபது ஆண்டுகளுக்கு முன் காந்தித் தாத்தா இறந்தார். காந்தித்தாத்தா மறைந்தாலும் அவருடைய புகழ் மறையாமல் ஒளி வீசுகிறது. நாம் காந்தித் தாத்தாவின் சிறந்த அறிவுரைகளை ஏற்று நடக்கவேண்டும்.

பொய் சொல்லக்கூடாது. பிற உயிர்களுக்குத் தீமை செய்யக்கூடாது. எல்லோரையும் அன்புடன் நேசிக்க வேண்டும். தீமை செய்தவர்க்கும் நன்மையே செய்யவேண்டும். இவைகள் யாவும்

காந்தித் தாத்தாவின் முக்கியமான அறிவுமொழிகள் ஆகும்.

| | | |
|---|---|---|
| வரலாறு | அறிவுரை | கருணை |
| மாநிலம் | அயல்நாடு | சிறந்த |
| நல்லொழுக்கம் | திருத்தி | எளியவர் |
| துண்டு | சத்தியம் | கதர் ஆடை |
| போராடினார் | புகட்டினார் | பொதுமக்கள் |
| விடுதலை | மகாத்மா | ஒளி |

கேள்விகள்

1. மகாத்மா என்று யாரைக் கொண்டாடுகிறார்கள் ?
2. அவர் பிறந்த ஊர் எது ?
3. சிறு வயதில் அவர் என்ன செய்தார் ?
4. காந்தித் தாத்தாவின் சிறந்த குணங்கள் யாவை ?
5. காந்தித் தாத்தாவின் அறிவு மொழிகள் யாவை ?

பயிற்சி

1. பொருள் மாறுபடுவதைப் புரிந்துகொள்.
   அரசன் நாட்டை ஆண்டு வந்தான்.
   நான் பிறந்து பத்து ஆண்டுகள் ஆகின்றன.
2. மாறுபாடு தெரிந்துகொள்.

| ஒருவர் | பலர் |
|---|---|
| நான் | நாம், நாங்கள் |
| நீ | நீ, நீங்கள் |
| அவன் | அவர்கள் |
| அவள் | அவர்கள் |



## 22. சிங்கமும், சுண்டெலியும்.

ஒரு காட்டில் சிங்கம் ஒன்று இருந்தது. அது ஒரு நாள் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தது. அப்பொழுது வளையிலிருந்து சுண்டெலி ஒன்று ஓடி வந்தது.

சுண்டெலி ஓடும்பொழுது, எதிரில் சிங்கம் தூங்குவதைப் பார்க்கவில்லை. அது சிங்கத்தின் மீது விழுந்து ஓடிற்று. அதனால் சிங்கத்தின் தூக்கம் கலைந்தது. உடனே விழித்துக்கொண்ட சிங்கம் சுண்டெலியைப் பார்த்து, "ஏ! சிறு பிராணியே! நீ ஏன் என் தூக்கத்தைக் கலைத்தாய்? என்னுடைய மூச்சுப்பட்டாலே நீ இறந்து விடுவாய் அல்லவா?" என்று சொல்லி அதட்டியது.

சுண்டெலி, அரசே! நான் தெரியாமல் செய்த பிழையை மன்னிக்க வேண்டும்" என்று வேண்டிக்கொண்டது. சிங்கமும் அதைப்பொருட்படுத்தாது விட்டு விட்டது.

காட்டில் ஒருநாள் ஒரு வேடன் பிராணிகளைப் பிடிக்க வலையை வீசியிருந்தான். தற்செயலாய் அங்கே வந்த சிங்கம் அவ்வலையில் சிக்கிக் கொண்டது. அது வெளிவர முயன்றது; ஆனால் முடியவில்லை. உடனே அது அலறியது.

அப்பொழுது அக் குரலைக் கேட்டு ஓடிவந்த சுண்டெலி சிங்கத்தைக் கண்டது. உடனே வலையைத் தன் பற்களால் துண்டித்துச் சிங்கத்தை விடுவித்தது. அன்று முதல் சிங்கம் சுண்டெலியிடம் அன்பாக இருந்தது. ஆகையால் சிறு பொருள் என்று எதையும் தள்ளக்கூடாது.

| | | |
|---|---|---|
| அயர்ந்து | பிழை | முயன்றது |
| வளை | பொருட்படுத்தாது | வெளிவர |
| கலைத்தது | தற்செயலாய் | குரல் |
| சிக்கிக்கொண்டது | அதட்டியது | வலை |
| விடுவித்தது | வீசியிருந்தான் | துண்டித்தது |

கேள்விகள்

1. சிங்கம் எதனால் விழித்துக்கொண்டது?
2. சுண்டெலியிடம் சிங்கம் என்ன சொல்லி அதட்டியது?
3. சுண்டெலி சிங்கத்திற்கு என்ன உதவி செய்தது?
4. இந்தக் கதையினால் நீ அறியும் நீதி என்ன?

பயிற்சி

1. மாறுபாடு தெரிந்து கொள்.

வேடன் வலையை வீசினான்.

எலி வளையில் புகுந்தது.

2. சரியான சொற்களைப் பொருத்தி வை.

| | |
|---|---|
| தூக்கம் | கேட்டது. |
| குரலைக் | கலைந்தது. |
| வலை | சிக்கிக்கொண்டது. |
| வலையில் | துண்டித்தது. |
| பற்களால் | வீசியிருந்தான். |



## 23. பூனையும் குரங்கும்

புத்தி கெட்ட பூனை ரெண்டு
புதுமையான தின்பண்டம்

பற்றிக் கொண்டு குரங்கினிடம்
பங்கிடக் கொடுத்தது பார் கொடுமை!

துண்டு ரெண்டு செய்திடவே
தூக்கி வைத்தது தராசினிலே;

ஒன்றுக்கொன்று தாழ்ந்திடவே
ஒன்றில் கொஞ்சம் தின்றிடவே

இப்படியே தின்பண்ட மெல்லாம்
அதுவே தின்றது அநியாயம்.



## 24. பேராசையின் விளைவு

ஒரு கிராமத்தில் ஒரு குடியானவர் இருந்தார். அவரிடம் ஒரு புதுமையான வாத்து இருந்தது, அது அன்றுடம் ஒரு பொன் முட்டை இடும். குடியானவர் அப் பொன் முட்டையை விற்பார். அதைக் கொண்டு தமக்கு வேண்டிய பொருள்களை வாங்கிக்கொள்ளுவார். ஆகையால் அவர் இன்பமாய் வாழ்க்கை நடத்தி வந்தார்.

ஒரு நாள் அவருக்கு ஓர் அவா உண்டாயிற்று. அவர் ஒரு பெரிய பணக்காரர் ஆக வேண்டுமென்று விரும்பினர். உடனே அதற்கு ஏற்ற ஓர் எண்ணம் தோன்றியது. ‘இந்த வாத்து தினமும் தவருமல் ஒரு பொன் முட்டை இடுவதால், இதன் வயிற்றில் ஏராளமான பொன் முட்டைகள் இருக்கவேண்டும். இதன் வயிற்றைக் கிழித்து, அவைகளை எல்லாம் எடுத்து விற்கலாம்;

அதிகமாய்ப் பணம் கிடைக்கும் அப்பணத்தில் நிலம், மாடிவீடு, நகைகள் எல்லாம் வாங்கலாம், என்பதே அந்த எண்ணம்.

மறுநாள் பொழுது விடிவதற்கு முன் குடியானவர் எழுந்தார்; ஒரு சிறிய அரிவாளை எடுத்து வாத்தின் வயிற்றைக் கிழித்தார்; மிகுந்த ஆசையோடு வயிற்றினுள்ளே இருப்பதைப் பார்த்தார் ஐயோ பாவம்! அன்று இடவேண்டிய ஒரு



பொன் முட்டைதான் வாத்தின் வயிற்றில் இருந்தது. குடியானவர் நினைத்தபடி ஏராளமான முட்டைகள் இல்லை. வயிறு கிழிக்கப்பட்டதனுல் வாத்தும் இறந்தது. அவர் தமது அறியாமையை நினைத்துத் தலையில் அடித்துக்கொண்டார். "இந்த வாத்தைக் கொல்லாமல் இருந்தால் தினமும் ஒரு பொன் முட்டையாவது கிடைக்குமே. உள்ளதும்போய்விட்டதே! அதிக ஆசைப்பட்டதனுல் தான் ஒன்றுமில்லாமல் போய்விட்டது" என்று எண்ணித் துயரம் அடைந்தார்,

பிள்ளைகளே! பேராசையின் விளைவைப் பார்த்தீர்களா! அதிக ஆசைப்பட்டால் உள்ளதும் போய் விடும்; பிறகு அந்தக் குடியானவரைப் போல் துயரம் அடைய நேரிடும்.

| | | |
|---|---|---|
| குடியானவர் | கொல்லாமல் | அவா |
| புதுமை | அறியாமை | பொன் முட்டை |
| கிழித்து | பேராசை | வாழ்க்கை |
| எண்ணம் | அன்ருடம் | துயரம் |
| பணக்காரர் | தவருமல் | ஏற்ற |
| ஏராளமான | விளைவு | உள்ளதும் |

கேள்விகள்

1. குடியானவரின் வாத்து என்ன முட்டை இடும்?
2. வாத்தின் வயிற்றைக்கிழித்தவுடன் அதில் எத்தனை முட்டைகள் இருந்தன?
3. இந்தக் கதையிலிருந்து நீ அறியும் நீதி என்ன?

பயிற்சி

1. எதிர்ச் சொற்களைத் தெரிந்து கொள்:

| | | | |
|---|---|---|---|
| விற்று | × வாங்கி | பணக்காரர் | × ஏழை |
| இன்பம் | × துன்பம் | புதுமை | × பழமை |

2. சரியான வார்த்தைகளை எழுதிப்படி.

கடைக்காரர் மிட்டாய் ———.
பையன்கள் மிட்டாய் ———.
பணம் உடையவர் ———.
பணம் இல்லாதவர் ———.
புத்தியுள்ளவன் ———.
புத்தி இல்லாதவன் ———.

3. இரண்டாவது படத்தைப் பார்த்து விடை கூறு:
   1. குடியானவர் எப்படி உட்கார்ந்திருக்கிருர்?
   2. அவர் ஏன் அப்படி உட்கார்ந்திருக்கிருர்?

# 25. மயில் பேசுகிறது!

குழந்தைகளே! என்னைப் பாருங்கள். என் அழகைப் பாருங்கள்! நான் யார் தெரியுமா? நான் தான் மயில். என்னை நீங்கள் பார்த்திருக்



கிறீர்களா? சில கோவில்களிலும் பூஞ்சோலை களிலும் என்னை அழகுக்காக வளர்க்கின்றனர். நான் பெரிய பறவையாக இருந்தாலும் என் தலை சிறியது. என் தலையில் உள்ள கொண்டை யைப்பாருங்கள். அது பார்வைக்கு நேர்த்தியாக இருக்கும்.

எனக்கு நீண்ட வால் இருக்கிறது. அதைத் தோகை என்று சொல்லுவார்கள். என் தோகையில் பல நிறங்கள் இருக்கும். அவை ஊதா, மஞ்சள், பச்சை, சிவப்பு, வெண்மை என்ற நிறங்கள் ஆகும், மனிதர்கள் என் தோகையால் விசிறி கட்டுவார்கள். அழகுக்காகவும் என் தோகையை வைத்திருப்பார்கள். சிறு பிள்ளைகளான நீங்கள் என் இறகைப் புத்தகத்திற்குள் வைத்திருப்பீர்கள் அல்லவா!

எனக்கு மேகத்தைக் கண்டால் மிகவும் மகிழ்ச்சி உண்டாகும். அப்பொழுது நான் என் தோகையை விரித்து ஆடுவேன் நான் ஆடும் பொழுது நீங்கள் பார்த்தால் வியப்பு அடைவீர்கள். பெரியவர்கள் கூட என் ஆட்டத்தைக் கண்டு மகிழ்வர். என்னல் மனிதருக்கு முக்கியமான பயனும் உண்டு. என் இறகு ஒரு மருந்துப் பொருளாக உதவுகிறது. என் இறைச்சியிலிருந்து எண்ணெய் எடுப்பார்கள். அதற்கு மயில் எண்ணெய் என்று பெயர்; அதுவும் ஒரு மருந்து ஆகும்.

நான் உயிருடன் இருக்கும்போது, அழகினல் உங்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கிறேன். இறந்த பிறகும் என்னல் உங்களுக்கு நன்மைகள் இருக்கின்றன.

| | | |
|---|---|---|
| பூஞ்சோலை | தோகை | வியப்பு |
| மேகம் | ஊதா | மருந்து |
| கொண்டை | விரித்து | இறைச்சி |
| ஆட்டம் | நேர்த்தியாக | மகிழ்வர் |

### கேள்விகள்

1. மயிலை எங்கே வளர்க்கிறார்கள் ?
2. மயிலை எதற்காக வளர்க்கிறார்கள் ?
3. மயில் எப்பொழுது ஆடும் ?
4. மயிலின் வாலுக்கு என்ன பெயர் ?
5 மயில் இறந்தபிறகு ஏற்படும் நன்மைகள் யாவை?

### பயிற்சி

1. கோடு இட்ட இடத்தை நிரப்பு :

மயிலின் தலை ———— .

மயிலுக்கு ———— வால் இருக்கிறது .

மயிலின் வாலுக்கு ———— என்று பெயர் .

மயிலின் இறைச்சியிலிருந்து ———— எடுப்பார்கள்.

2. மாறுபாடு தெரிந்து கொள் :

சிறியவன்—பெரியவன். சிறியது—பெரியது.

சிறியவள்—பெரியவள். சிறியவை-பெரியவை.

சிறியவர்—பெரியவர். சிறிய—பெரிய.

3. மயிலின் உடல் பெரியது; அதன் தலை சிறியது.

இதைப்போல் பின் வருபவைகளை எழுது :

கோழியின் தலை —— ; அதன் உடல் —— .

அண்ணன் —— ; தம்பி —— .

அக்காள் —— ; தங்கை —— .

பெற்றோர்கள் —— ; பிள்ளைகள் —— .

4. எதிர்ச் சொற்களைப் பொறுக்கி எழுது.

சில, இன்பம், உயரமான, பல, மூடினான், துன்பம், குட்டையான, திறந்தான்,

# 26. செய்தி சொல்லுதல்

மனத்திற்குள் படித்துப் புத்தகத்தை மூடிவிட்டுக் கேள்விகளுக்கு விடை கூறு.

1. எங்கள் பாடசாலைக்கு ஒரு கிழவர் வந்தார். அவருடன் ஒரு பையனும் வந்தான். கிழவர் பையனைப் பள்ளியில் சேர்த்துக் கொள்ளும்படி ஆசிரியரிடம் கூறினர். ஆசிரியர் அவனை முதல் வகுப்பில் சேர்த்துக்கொண்டார். அவனுக்குத் தமிழ் எழுத்துக்களைக் கற்றுக் கொடுத்தார். கிழவர் ஆசிரியருக்கு வெற்றிலை, பாக்கு, பழங்கள் கொடுத்தார்; எங்களுக்குச்சர்க்கரை கொடுத்தார்.

கேள்விகள்

1. கிழவர் யாரை அழைத்து வந்தார் ?
2. எதற்காக அழைத்து வந்தார் ?
3. ஆசிரியருக்கு அவர் என்ன கொடுத்தார் ?
4. உங்களுக்கு என்ன கிடைத்தது ?

2. என் மாமா நேற்று மதுரையிலிருந்து வந்தார். என்னைக் கடைத்தெருவிற்கு அழைத்துப் போனர். சட்டையும் கணக்குப் புத்தகமும் வாங்கிக் கொடுத்தார். வீடு திரும்பும் பொழுது மழை வந்துவிட்டது, ஒரு வண்டி வைத்துக்கொண்டு வீடுவந்து சேர்ந்தோம்.

கேள்விகள்

1. மாமா என்று வந்தார் ?
2. அவர் எந்த ஊரிலிருந்து வந்தார் ?
3. உன்னை எந்த இடத்திற்கு அழைத்துப் போனர்?
4. உனக்கு என்னென்ன வாங்கிக் கொடுத்தார் ?



## 27. பாப்பா பாட்டு

ஓடி விளையாடு பாப்பா — நீ
ஓய்ந்திருக்கலாகாது பாப்பா.
கூடி விளையாடு பாப்பா — ஒரு
குழந்தையை வையாதே பாப்பா.
சின்னஞ் சிறு குருவி போல — நீ
திரிந்து பறந்து வா பாப்பா.
வண்ணப் பறவைகளை கண்டு — நீ
மனத்தில் மகிழ்ச்சி கொள்ளு பாப்பா.
கொத்தித் திரியும் அந்தக் கோழி — அதைக்
கூட்டி விளையாடு பாப்பா,
எத்தித்திருடும் அந்தக் காக்கை—அதற்(கு)
இரக்கப் படவேணும் பாப்பா.
பாலைப் பொழிந்து தரும் பாப்பா—அந்தப்
பசு மிக நல்லதடி பாப்பா.
வாலைக் குழைத்து வரும் நாய்தான்—அது
மனிதர்க்குத் தோழனடி பாப்பா,

வண்டி யிழுக்கும் நல்ல குதிரை—நெல்லு
வயலில் உழுது வரும் மாடு;

அண்டிப் பிழைக்கும் நம்மை ஆடு—இவை
ஆதரிக்க வேணுமடி பாப்பா.

காலை யெழுந்தவுடன் படிப்பு—பின்பு
கனிவு கொடுக்கும் நல்ல பாட்டு.

மாலை முழுதும் விளையாட்டு—என்று
வழக்கப் படுத்திக்கொள்ளு பாப்பா.

பொய்சொல்லக்கூடாது பாப்பா—என்றும்
புறஞ்சொல்ல லாகாது பாப்பா.

தெய்வம் நமக்குத் துணை பாப்பா—ஒரு
தீங்குவர மாட்டாது பாப்பா.

— பாரதியார்.

கேள்விகள்

1. இப்பாடலில் வந்துள்ள பறவைகள் யாவை ?
2. பசு நமக்கு என்ன தருகிறது ?
3. காலையில் எழுந்தவுடன் நாம் என்ன செய்ய வேண்டும் ?
4. நாம் சொல்லக் கூடாதவை எவை ?

பயிற்சி

இந்தப் பாட்டை மனப்பாடம் செய்து பாடவேண்டும்.

## 28. நல்ல பையன்

சாமிநாதன் ஒரு நல்ல பையன். அவன் தன் தாய் தந்தையரின் சொற்படி நடப்பான். வீட்டில் உள்ள மற்றவர்களிடமும் நல்ல முறையில் பழகுவான். இவன் மீது எல்லோரும் அன்பு செலுத்துவார்கள்.



சாமிநாதன் பொழுது விடிவதற்கு முன்பே படுக்கையை விட்டு எழுந்து விடுவான். நாள் தோறும் அழுக்குத் தேய்த்துக் குளிப்பான்; தன் உடைகளைத் தானே தோய்த்துச் சுத்தமாக வைத்துக் கொள்வான்; ஆசிரியர் கொடுக்கும்

வீட்டு வேலேகளை ஒழுங்காகச் செய்வான்; தாயார் அளிக்கும் உணவை உண்டபின் பள்ளிக்கூடத் திற்குப் போவான்.

பள்ளிக்கூடத்தில் சாமிநாதன் தெளிவாகப் பாடங்களைப் படிப்பான்; படித்த பாடங்களை ஞாப கத்தில் வைத்துக் கொள்வான். பாட்டுக்களை இசையுடன் பாடுவான். அவன் எல்லாப் புத்தகங் களையும் அழகாக வைத்துக் கொள்வான். கற்பல கையில் எழுதியதை எச்சிலேத் தொட்டு ஒரு பொழுதும் அழிக்கமாட்டான். தண்ணீராலேயே அழிப்பது அவன் பழக்கம். அதற்காக அவன் தண்ணீரில் நனைத்த பஞ்சை வைத்துக் கொண் டிருப்பான். ஆசிரியர் அவனைத் 'திறமையுள்ள பையன்' என்று பாராட்டுவார்.

சாமிநாதன் மாலே நேரத்தில் நன்ருக விளையா டுவான். அவன் எப்பொழுதும் உண்மையையே பேசுவது வழக்கம். அவன் ஒருவரையும் ஏமாற்ற மாட்டான். பிறர் பொருளை அவன் விரும்புவ தில்லை. தான் ஏதாவது பொருளைக் கண்டெடுத் தால் அந்தப் பொருளை ஆசிரியரிடம் சேர்த்து விடுவான். அவன் ஏழை மாணவர்களுக்குத் தன் ஞல் முடிந்த உதவிகளைச் செய்வான். அதனுல் எல்லோரும் சாமிநாதனை 'நல்ல பையன்' என்று போற்றுவார்கள். நீயும் அவனைப்போல் 'நல்ல பையன்' என்று பெயர் எடுக்கவேண்டும்.

| | | |
|---|---|---|
| அழிப்பது | செலுத்துவார் | ஏமாற்று |
| பழகுவான் | பிறர் | இசை |
| நனைத்த | தேய்த்து | தோய்த்து |
| முடிந்த | முன்பே | கண்டெடுத்தால் |
| அழுக்கு | போற்றுவார்கள் | தெளிவாக |

## பயிற்சி

1. கீழ்க்கண்ட கேள்விகளை மௌனமாகப் படி.
பிறகு உண்டு, இல்லை என்று விடை எழுது.

1. நீ இன்று பொழுது விடிவதற்குமுன் படுக்கையை விட்டு எழுந்தது உண்டா ?
2. நீ இன்று குளித்தது உண்டா ?
3. நீ நாடகம் பார்த்தது உண்டா ?
4. நீ மாலை நேரத்தில் விளையாடுவது உண்டா ?
5. உன் வீட்டில் பசு மாடு இருக்கிறதா ?
6. நீ நாள்தோறும் இரவில் பால் குடிப்பது உண்டா?

2. எதிர்ச் சொற்களைத் தெரிந்துகொள் :

சுத்தமாக × அசுத்தமாக போவான் × வருவான்
போற்றுவார் × இகழ்வார் மகிழ்ச்சி × வருத்தம்

3. பொருள் மாறுவதைப் புரிந்துகொள் :

நாம் மாலை நேரத்தில் விளையாடவேண்டும்.
மலர்களால் மாலை கட்டலாம்.

4. சொற்களைப் பொருத்திப்படி :

| | |
|---|---|
| மாலை | வேலை |
| வீட்டு | மாட்டான் |
| இசையுடன் | புத்தகங்கள் |
| படிக்கும் | பாடுவான் |
| ஏமாற்ற | நேரம் |

# 29. புதிய எழுத்துக்கள்



ஜாடி



புஸ்தகம்



புஷ்பம்



ஹனுமான்

ஜ ஷ ஸ ஹ

ஜவாஹர்லால் நேரு அலகாபாத்தில் பிறந்தார்.
ரோஜா புஷ்பம் மிக அழகு.
சரஸ்வதி ஹரிஹரனின் தங்கை.
ஷாஜஹான் தாஜ்மஹாலைக் கட்டினார்.

ஹிந்து, முஸ்லிம், கிறிஸ்து, ஜைனர் முதலான மதத்தினர் நம் நாட்டில் வசிக்கிறார்கள்.

(ஜ, ஷ, ஸ, ஹ என்ற நான்கு எழுத்துக்களும் பிற மொழிச் சொற்களைத் தமிழில் எழுதும்பொழுது உபயோகிக்கப்படுகின்றன.)

# 30. விழாக்கள்

பொங்கல் தமிழ் மக்களுக்கு ஒரு முக்கியமான விழாவாகும். அதை ஒவ்வொரு தமிழ் ஆண்டிலும் தை மாதம் முதல் தேதியில்கொண்டாடுகிருர்கள். பொங்கல் விழாவைச் சங்கராந்தி என்றும் பொங்கல் பண்டிகை என்றும் கூறுவார்கள். பொங்கல் பண்டிகைக்கு முதல் நாள் போகிப்பண்டிகை ஆகும்; மறு நாள் மாட்டுப் பொங்கல் ஆகும்.



பொங்கலுக்கு ஒருவாரம் முன்னதாகவே வீடுகளை யெல்லாம் சுத்தம் செய்வார்கள்: ஒட்டடைகளை நீக்கிச் சுவர்களுக்கு வெள்ளையடிப்பார்கள். புதிய மண்பாண்டங்கள் வாங்குவார்கள்.பொங்கல் பண்டிகை நாளில் சூரியனை வழிபடுவார்கள். சர்க்கரைப்பொங்கல், கரும்பு, வாழைப்பழம், தேங்காய், மஞ்சள் கொத்து, இஞ்சிக்கொத்து முதலியவைகளைச் சூரியனுக்குப் படைப்பது வழக்கம்.

மாட்டுப் பொங்கலன்று மாடுகளைக் குளிப்பாட்டி, நெட்டிமாலைகள், மாவிலைக்கொத்து முதலியன சூட்டி அழகு படுத்துவார்கள். மாட்டின் கொம்புகளுக்கு வண்ணம் தீட்டுவார்கள். சோறு சமைத்து அவைகளுக்கு வைப்பார்கள்.

'கிறிஸ்துமஸ்' விழா கிறிஸ்துவமதத்தைச்சேர்ந்தவர்களுக்கு முக்கியமானது. கிறிஸ்துமஸ் விழா ஒவ்வொரு ஆங்கில ஆண்டிலும் டிசம்பர் மாதம்

இருபத்தைந்தாம் நாளில் கொண்டாடப்படும். இயேசு கிறிஸ்து என்ற பெரியார் கிறிஸ்துவமதத்தைஏற்படுத்தினர். அவர் பிறந்த தினத்தை கிறிஸ்துவர்கள் ஒரு திருவிழாவாகக் கொண்டாடுகிறார்கள். அன்று அவர்கள் புதிய ஆடைகளை உடுப்பது வழக்கம். பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்குத் தின்பண்டங்களையும், விளையாட்டுப் பொருள்களையும் வாங்கிக் கொடுப்பார்கள். மாதா கோவிலுக்குச் சென்று சிறப்பாக வழிபாடு செய்வார்கள்.



'பக்ரீத்'பண்டிகை முஸ்லிம்களுக்கு முக்கியமான விழாவாகும். முகம்மதுநபி என்னும் பெரியாரால் ஏற்படுத்தப்பட்ட மதத்திற்கு இஸ்லாமிய மதம் என்று பெயர். முகம்மது நபியைப்பின் பற்றுகிறவர்கள் இஸ்லாமியர்கள் அல்லது முஸ்லிம்கள் என்று சொல்லப்படுவார்கள். பக்ரீத் பண்டிகையை முஸ்லிம்கள் மிகவும் சிறப்பாகக் கொண்டாடுவார்கள். அன்று அவர்கள் புதிய ஆடைகளை அணிந்து களிப்புடன் இருப்பார்கள். மசூதிக்குச்சென்று வழிபாடு நடத்துவார்கள்.



| | | |
|---|---|---|
| இஸ்லாமியர் | சங்கராந்தி | இயேசுகிறிஸ்து |
| படைப்பது | நெட்டிமாலை | போகிப்பண்டிகை |
| வழிபாடு | மாவிலைக்கொத்து | மாட்டுப்பொங்கல் |
| தீட்டுவார்கள் | மாதாகோவில் | மஞ்சள்கொத்து |
| களிப்பு | மசூதி | சர்க்கரைப் பொங்கல் |

கேள்விகள்

1. பொங்கல் பண்டிகை எப்பொழுது கொண்டாடப் படுகிறது ?
2. அன்று சூரியனுக்குப் படைக்கப்படும் பொருள்கள் யாவை?
3. கிறிஸ்தவர்களுக்கு முக்கியமான பண்டிகை எது ?
4. பக்ரீத் பண்டிகையைப் பற்றி நீ அறிந்ததைச் சொல்.

1. கோடு இட்ட இடங்களை நிரப்பு :
   1. பொங்கலுக்கு முதல் நாள் —— பண்டிகை ஆகும். மறுநாள் —— பொங்கல் ஆகும்.
   2. மசூதிக்குச் சென்று —— நடத்துவார்கள்.
   3. மாட்டின் —— வண்ணம் தீட்டுவார்கள்.

2. கீழ்க்கண்ட சொற்களில் பொருத்தமானதைக் கோடிட்ட இடங்களில் அமைத்துப் படி.

   பசு, சூரியன், குதிரை, பூ, மயில், பழம், கோழி, அவரைக்கொடி.

   1. ——— கிழக்கில் தோன்றும்.
   2. ——— வண்டி இழுக்கும்.
   3. ——— செடியில் பூக்கும்.
   4. ——— பால் தரும்.
   5. ——— கடையில் விற்கும்.
   6. ——— தோகையை விரித்து ஆடும்.
   7. ——— முட்டை இடும்.
   8. ——— பந்தலில் படரும்.



## 31. வாங்கிக் கொடு !

வாழைப்பழம் வாங்கிக்கொடு அம்மாவே !
தோசை ஒன்று சுட்டுக்கொடுசொய்-சொய்-சொய்.
மிட்டாய் ஒன்று வாங்கிக்கொடு அம்மாவே !
மணி ஒன்று வாங்கிக்கொடு கிண்-கிண்-கிண்.
சோப்பு ஒன்று வாங்கிக்கொடு அம்மாவே !
டமாரம் ஒன்று வாங்கிக்கொடு டம்-டம்-டம்.
ஊதல் ஒன்று வாங்கிக்கொடு அம்மாவே !
வண்டி ஒன்று வாங்கிக்கொடு ஹய்-ஹய்-ஹய் !
கெண்டி ஒன்று வாங்கிக்கொடு அம்மாவே !
சலங்கை ஒன்று வாங்கிக்கொடு ஜல்-ஜல்-ஜல்.
பட்டுக்குடை வாங்கிக்கொடு அம்மாவே !
பட்டாசு ஒன்று வாங்கிக்கொடு டப்-டப்-டப்.

# 32. இடைப்பையனும் புலியும்

(படக்கதை)




படங்களைப் பார்த்து கதையைச் சொல்லுக.

# 33. சிங்கமும் எருதுகளும்

(படக்கதை)




படங்களைப் பார்த்துக் கதையைச் சொல்லுக.

# 34. வாக்கியங்கள்

பின்வரும் வாக்கியங்கள் முறைப்படி அமையவில்லை. வார்த்தைகளை முறைப்படி அமைத்துப்பார். புதுவார்த்தைகளைச் சேர்க்காதே. மௌனமாகப் படித்து விரைவில் எழுதி, உன் ஆசிரியரிடம் காட்டு.

1. எழுந்து கடவுளை காலையில் வணங்கு
2. விளக்கி பல் கழுவு முகம்
3. பாடங்களைத் தெளிவாகப் படி வீட்டில்
4. பேசு எப்பொழுதும் உண்மையையே
5. மகாத்மா தந்தை நம் தேசத்தின் காந்தி
6. படிப்பது இரண்டாம் நாங்கள் வகுப்பு
7. பொங்கல் மாதம் தை முதல் வரும் தேதி
8. சொல்வதைக் கவனமாகக்கேள் ஆசிரியர்
9. கொடுக்கிறது பசு நமக்குப் பால்
10. இல்லை ஞாயிற்றுக்கிழமை பள்ளிக்கூடம்
11. பள்ளிக்குத்தவருமல் போ நாள்தோறும்
12. வசிக்கிறோம் நாம் தமிழ் நாட்டில்
13. இரயில் ஓடும் தண்டவாளத்தின் மேல்
14. நன்றாகக் கல்வி ஔவையார் கற்றிருந்தார்
15. நல்ல பெயர் பையன் என்று எடு

# 35. ஆமையும் முயலும்

## [ நாடகம் ]

### காட்சி 1.

(காட்டில் ஒரு முயல் ஒரு செடியின் நிழலில் நின்று கொண்டிருக்கிறது. அங்கே ஓர் ஆமை மெதுவாக நடந்து வருகிறது. முயல் ஆமையைப் பார்த்துச் சிரிக்கிறது.)

ஆமை:— முயலே! நீ என்னைப் பார்த்து ஏன் சிரிக்கிறாய்?

முயல்:— ஆமையே! நீ நடந்துவரும் அழகைப் பார்த்தேன். எனக்குச் சிரிப்பு வந்து விட்டது!

ஆமை:— ஏன் அப்படி? நான் அழகாக நடக்க வில்லையா?

முயல்:— அழகாகவே நடக்கிறாய்! ஆனால் உன் நடையின் வேகம் யாருக்கும் வராது!

ஆமை:— என்னை ஏளனம் செய்கிறாயா?

முயல்:— இல்லை! உள்ளதைச் சொன்னேன். என்னைப்போல் உன்னால் ஓட முடியாது அல்லவா?

ஆமை:— நான் அதை ஒப்புக்கொள்கிறேன். ஆனாலும் நமக்குள் ஓர் ஓட்டப்பந்தயம் வைப்போம். சம்மதமா?

முயல்:— உண்மையாகவா கேட்கிறாய்?

ஆமை:— ஆம். பந்தயம் வைத்துப்பார். நான் உன்னை வெற்றி பெறுவேன்!

முயல்:— (சிரித்து) கையால் ஆகாதவன் பெருமை பேசுவது வழக்கம்! நீயும் அதுபோலத்தான் பேசுகிறாய். நீயாவது என்னை தோற்கடிப்பதாவது?

(நரி வருகிறது)

நரி:— நண்பர்களே! வணக்கம். நீங்கள் இருவரும் என்ன பேசிக்கொண்டிருக்கிறீர்கள்?

முயல்:—நரியாரே! இதைக்கேட்டீரா? என்னுடன் இந்த ஆமை ஓட்டப் போட்டிக்கு வர விரும்புகிறது!

ஆமை:—ஆம். நரியாரே! நான் ஓட்டப் போட்டியில் முயலை வெற்றிபெறப் போகிறேன்.



நரி:—நல்லது. நீ முயலை வெற்றிகொள்வது ஆச்சரியம்தான். எதற்கும் சோதித்துப் பார்ப்போம். இருவரும் இங்கே வாருங்கள்! இப்படி நில்லுங்கள்!

(நரி தரையில் ஒரு கோட்டை கீறுகிறது. முயலும் ஆமையும் அந்தக் கோட்டில் நிற்கின்றன.)

நரி:—அதோ தெரிகிறது பாருங்கள்! அந்தக் குளத்தை நோக்கி இருவரும் ஓடவேண்டும். அங்குள்ள மரத்தைத் தொடவேண்டும். முதலில் தொட்டவரே வெற்றி பெற்றவர் ஆவார். புறப்படுங்கள். ஒன்று, இரண்டு, மூன்று.

(முயலும், ஆமையும் புறப்படுகின்றன.)

## காட்சி 2

(முயலும் சிறிது தூரம் ஓடி நிற்கிறது)

முயல்:—(தனக்குள்) அதோ குளம் தெரிகிறது! ஆமை மெள்ளமெள்ள வருவதற்கு அதிக நேரம் ஆகும். அதற்குள் சிறிது தூங்கிவிட்டுப்போகலாம்.

(ஒரு செடியின் நிழலில் படுத்து தூங்குகிறது சிறிது நேரம் கழித்து ஆமை வருகிறது. முயல் தூங்குவதைப் பார்க்கிறது.)

ஆமை:—(தனக்குள்) முயலே! நீ இங்கே தூங்கிக் கொண்டிருக்கிருயா? தூங்கு! நன்ருகத் தூங்கு. விழித்துப்பார்க்கும்போது வெற்றிபெற்றது நான் என்பதை அறிவாய்.

(நிற்காமல் தொடர்ந்து சென்று மரத்தடிக்கு வருகிறது.)

(ஆமை மரத்தைத் தொட்டுவிட்டு நின்றுகொண்டிருக்கிறது. முயல் தூக்கத்திலிருந்து விழிக்கிறது. உடனே வேகமாக ஓடிவந்து மரத்தடியில் நிற்கும் ஆமையைப் பார்த்து, ஏமாற்றத்துடன் பதறுகிறது. நரியும் வருகிறது.)

நரி:—நண்பரே! வீரம்பேசிய முயலே! பந்தயத்தில் ஆமைக்குத்தான் வெற்றி! நீர் உமதுசோம்பலால் தோல்வி கண்டீர். சோம்பல் உள்ளவர் தேம்பித் திரிவர். சோம்பல் கொண்டு தூங்கியதால் நீர் ஏமாற்றம் அடைந்தீர். ஆமையோ விடாமுயற்சியால் வெற்றி பெற்றது. முயற்சியால் முடியாதது இல்லை. இந்த உண்மையை இனிமேலாவது அறிவீர். வருகிறேன்; வணக்கம்.

(நரி போகிறது.)

முயல்:—இன்று நான் ஒரு புதிய பாடம் கற்றுக் கொண்டேன். ஆமையே! நீயே எனக்கு அறிவு புகட்டினுய்! உனக்கு மிகவும் நன்றி. வருகிறேன்.

ஆமை:—நல்லது. போய்வா. நன்றி.

(முயல் போகிறது.)

### பயிற்சி

ஆசிரியர் முன் இந்த நாடகத்தை மாணவர்கள் நடித்துக் காட்டவேண்டும்.

## 36. வாழ்க! வாழ்க!

வாழ்க வாழ்க உலகெலாம்
வாழ்க எங்கள் தேசமும்
வாழ்க எங்கள் தமிழகம்
வாழ்க எங்கள் மனையறம்
வாழ்க மேழிச் செல்வமே.
வளர்க நாட்டுக் கைத்தொழில்
வாழ்க எங்கள் வாணிபம்
வாழ்க நல்ல அரசியல்.
அன்பு கொண்டு அனைவரும்
அச்சமின்றி வாழ்கவே
துன்பமேதும் இன்றி நாம்
துக்கம் யாவும் நீங்கியே
இன்பமான யாவும் எய்தி
இந்த நாட்டில் யாவரும்
தெம்பினோடு தெளிவு பெற்றுத்
தேவர் போற்ற வாழ்குவோம்.

— கவிஞர். இராமலிங்கம் பிள்ளை.

# 37. செய்யுள் பகுதி

## 1. உலக நீதி

1. ஓதாமல் ஒருநாளும் இருக்கவேண்டாம்.
2. ஒருவரையும் பொல்லாங்கு சொல்லவேண்டாம்.
3. மாதாவை ஒருநாளும் மறக்கவேண்டாம்.
4. வஞ்சனைகள் செய்வாரோடு இணங்கவேண்டாம்.
5. போகாத இடந்தனிலே போகவேண்டாம்.
6. போகவிட்டுப் புறஞ்சொல்லித் திரியவேண்டாம்.
7. நெஞ்சாரப் பொய்தன்னைச் சொல்லவேண்டாம்.
8. நிலையில்லாக் காரியத்தை நிறுத்தவேண்டாம்.
9. நஞ்சுடனே ஒரு நாளும் பழகவேண்டாம்.
10. நல்லிணக்கம் இல்லாரோடு இணங்கவேண்டாம்.
11. அஞ்சாமல் தனிவழியே போகவேண்டாம்.
12. அடுத்தவரை ஒருநாளும் கெடுக்கவேண்டாம்.
13. மனம்போன போக்கெல்லாம் போகவேண்டாம்.
14. மாற்றானை உறவென்று நம்பவேண்டாம்.
15. தனம் தேடி உண்ணாமற் புதைக்கவேண்டாம்.
16. தருமத்தை ஒரு நாளும் மறக்கவேண்டாம்.
17. சினந்தேடி அல்லலையும் தேடவேண்டாம்.
18. சினத்திருந்தார் வாசல்வழிச் சேரவேண்டாம்.
19. குற்றமொன்றும் பாராட்டித் திரியவேண்டாம்.
20. கொலைகளவுசெய்வாரோடு இணங்கவேண்டாம்.
21. மூத்தோர்சொல்வார்த்தைதனை மறக்கவேண்டாம்.
22. முன்கோபக்காரரோடு இணங்கவேண்டாம்.
23. வாத்தியார் கூலியை வைத்திருக்கவேண்டாம்.
24. வழிப்பறித்து திரிவாரோடு இணங்கவேண்டாம்.
25. கருதாமற் கருமங்கள் முடிக்கவேண்டாம்.
26. கணக்கிழிவை ஒருநாளும் பேசவேண்டாம்.
27. பொருவார்தம் போர்க்களத்தில் போகவேண்டாம்.

28. பொது நிலத்தில் ஒரு நாளும் இருக்கவேண்டாம்
29. ஊரோடுங் குண்டுணியாய்த் திரியவேண்டாம்
30. உற்ருரை உதாசினங்கள் சொல்லவேண்டாம்
31. பேரான காரியத்தைத் தவிர்க்க வேண்டாம்
32. பிணைப்பட்டுத் துணை போகித் திரியவேண்டாம்
33. புண்படவே வார்த்தைதனைச் சொல்லவேண்டாம்
34. புறஞ்சொல்லித்திரிவாரோடு இணங்கவேண்டாம்
35. மறம்பேசித் திரிவாரோடு இணங்கவேண்டாம்
36. வாதாடி வழக்கழிவு சொல்லவேண்டாம்
37. திறம்பேசிக் கலகமிட்டுத் திரியவேண்டாம்
38. தெய்வத்தை ஒருநாளும் மறக்கவேண்டாம்
39. இறந்தாலும் பொய்தன்னைச் சொல்லவேண்டாம்
40. ஏசலிட்ட உற்ருரை நத்தவேண்டாம்

## உ. கொன்றை வேந்தன்

1. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்
2. ஆலயம் தொழுவது சாலவும் நன்று
3. ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்
4. எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்
5. ஏவா மக்கள் மூவா மருந்து
6. ஐயம் புகினும் செய்வன செய்
7. ஒருவனைப்பற்றி ஓரகத்திரு
8. ஔவியம் பேசுதல் ஆக்கத்திற்கழிவு
9. கிட்டாதாயின் வெட்டன மற
10. கேட்டில் உறுதி கூட்டும் உடைமை
11. கைப்பொருள் தன்னில் மெய்ப்பொருள் கல்வி
12. கோட்செவிக் குறளை காற்றுடன் நெருப்பு
13. கௌவை சொல்லின் எவ்வருக்கும் பகை
14. சீரைத் தேடின் ஏரைத் தேடு

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்

ஆலயம் தொழுவது சாலவும் நன்று

இல்லற மல்லது நல்லற மன்று

ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்

ஏவா மக்கள் மூவா மருந்து

ஒன்று பட்டால் உண்டு வாழ்வு

15. சூதும் வாதும் வேதனை செய்யும்
16. சேமம் புகினும் சாமத் துறங்கு
17. சோம்பர் என்பவர் தேம்பித் திரிவர்
18. தந்தை சொல் மிக்க மந்திரமில்லை
19. தாயிற் சிறந்ததொரு கோவிலுமில்லை
20. திரைகட லோடியும் திரவியம் தேடு
21. தீராக்கோபம் போராய் முடியும்
22. தேடாது அழிக்கின் பாடாய் முடியும்
23. தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது.
24, தோழனோடும் ஏழமை பேசேல்
25. நல்லிணக்க மல்லது அல்லற் படுத்தும்
26. நாடெங்கும் வாழக் கேடொன்றும் இல்லை
27. நுண்ணிய கருமமும் எண்ணித் துணி
28. நூன் முறை தெரிந்து சீலத் தொழுகு
29 நைபவர் எனினும் நொய்ய உரையேல்.
30. நொய்யவர் என்பவர் வெய்யவர் ஆவார்
31. பாலோடாயினும் காலம் அறிந்துண்
32. புலையும் கொலையும் களவும் தவிர்
33. பையச் சென்றல் வையம் தாங்கும்
34. பொல்லாங் கென்பவை எல்லாம் தவிர்
35. மருந்தேயாயினும் விருந்தோ டுண்
36. மீகாமன் இல்லா மரக்கலம் ஓடாது
37. முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்
38. மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்
39. ஊக்க முடைமை ஆக்கத்திற் கழகு.
40. ஓதாதார்க்கில்லை உணர்வொடு ஒழுக்கம்

---

